ஸ்ரீ

ஸ்ரீனிவாஸ விஜயதே

திருமலை திருப்பதி

ஸ்ரீ வெங்கடேஸ்வர க்ஷேத்திர மஹாத்மியம்

# ஸ்ரீ வெங்கடாசல - ஸ்தலபுராணம்.

## ஸ்ரீ அலர்மேல்மங்கையம்மன் மஹாத்மியம்





இது,
பெரியோர்களால் இயற்றியதை,
திருப்பதி புஸ்தக வியாபாரம்
பி. ரங்கநாயகுலு அவர்களால்
திருப்பதி ஸ்ரீவியாஸ அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப் பட்டது.

விலை] 1932. [0—4—0.

# அட்டவணை.











ஸ்ரீ

ஸ்ரீமத்வேங்கடரமணசஹாயம்.

# ஸ்ரீவேங்கடேச ஸ்தலபுராணமஹத்துவம்



## திருப்பதி பரமாத்மாவின் லீலாவதாரவாஸஸ்தானம்.

ஸ்ரீமத் சென்னைபுரிக்கு வாய்வுதிக்கில் பனிரண்டு காததூரத்தில் கிருதயுகத்தில் விருஷகிரியெனவும் திரேதாயுகத்தில் அஞ்சனாத்திரியெனவும் துவாபரயுகத்தில் சேஷகிரியெனவும் கலியுகத்தில் வேங்கடகிரியெனவும் இன்னுமநேகவிநாள் பெயர்வழங்கி பிரகிருதத்தில் ஸமஸ்தஜனங்களாலும் சாதாரணமாக ஆந்திர திராவிட பாஷைகளில் திருப்பதியென்றும் திருமலையென்றுஞ்சொல்லப்பட்ட ஓர் பர்வதம் தென்வடல் முப்பதுகாதநீளமும் கிழக்குமேற்குமூன்றுகாத அகலமும் பொருந்தி ஆதியில் அலமேலுமங்கையுடன்கூடி ஸ்ரீவெங்கடேசுவரஸ்வாமி வஸித்திருக்குங்கோவிலினாலும் மத்தியில் இலக்ஷிமீ ஸமேதராகநிருஸிம்ஹமூர்த்தி வஸித்திருக்கும் அஹோபிலமென்னும் புண்ணியக்ஷேத்திரத்திலும் அந்தியத்தில்பிரமராம் பிகாசஹிதராக மல்லிகார்ச்சுனஸ்வாமி பிரகாசித்திருக்கும் ஸ்ரீசைலமென்னும் சிவக்ஷேத்திரத்தினாலும் அலங்கிருதமாகி வராஹக்ஷேத்திரமென புராணபிரசித்தமாக வழங்கப்பட்டுவருகின்றது.

## கிருதயுகத்தில் விருஷபாத்திரி யென்பதற்குக்காரணம்.

கிருதயுகத்தில் விருஷபாசுரனென்னு மிராக்கதன் ஸ்ரீ மஹாவிஷ்ணுவுடன் தான்யுத்தம்பூண்டு அந்தயுத்தத்தில் ஸ்வாமியால் சொல்லப்பட்டுபரமபதமடையலாமெனக்கருதி அப்பர்வத்தின் மத்தியபாசத்திலுள்ள அஹோபிலக்ஷேத்திரத்திற்குச் சென்று அவ்விடமிருக்கும் வராஹதீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து அத்தீர்த்தில் நித்தியமும் நிருஸிம்ஹமூர்த்தியை ஆராதித்து கட்கத்தினால் தன்சிரசை சேதித்து ஸ்வாமிபாதாரவிந்தத்தில் ஸமர்பித்து நாட்டியமாடி ஸ்வாமிக்கு ஆனந்தமுண்டாக்கிறுமபடி தன்சிரசை அடைந்துகொண்டு இவ்விதமாகநித்தியமுந் தபோநிஷ்டனாகவிருக்கைல் அவன் சிரசில் தபோக்

னி ஜ்வாலை உண்டாய் லோகங்களை தகித்துக்கொண்டு வந்ததினால் அப்போது ஸமஸ்ததேவதைகளும் அந்த அக்னிஜ்வாலையொருக்க மாட்டாமல் ப்ரமனிடம்சென்று அவருடன் அந்த இராக்கதன்விரு த்தாந்தத்தைச் சொல்லுகையில் அவருக்கொன்றுந் தோன்றாமை யால் அத்தேவர்களுடன் தானும் ஸ்ரீமந்நாராயணனிடத்திற்குச் செ ன்று அவருக்குநமஸ்கரித்து துதிசெய்து சுவாமீ பூலோகத்திலிருக் கும்வராஹ க்ஷேத்திரத்தில் விருஷபாசுரன் கோரதபம் புரிகின்றனன் அவன் தபம் நிறைவேறினால்சகல உலகங்களும் நசித்துவிடுமாதலால் தாம் அவ்வரக்கனைக்கொல்லவேண்டுமென வேண்டிக்கொள்ள பக்த இரக்ஷகரான பகவான் ப்ரமன் வேண்டுகோளுக்கிரங்கி ஒய்ப்ர்ம்மா வே நாமந்த இராக்தனை உமதுகோரிக்கையின் படியேசங்கரிப்போமெ னமொழிந்து அவரைசத்தியலோகமனுப்பவிட்டு தாம் அந்தர்த்தான மாய்விட்டனர்.

அனந்தரம் அஹோபிலக்ஷேத்திரத்தில் நிருஸிம்ஹஸ்வாமியை ஆராதித்துக்கொண்டிருக்கிற அவ்வரக்கனுக் கொருநாள் பிரசன்ன ராகி ஒய் அரக்கனே உன்கோறிக்கை யாதுகேளுமீகிறோமென மொழிய அவ்வரக்கன்கேட்டு ஸ்வாமி அடியேனுக்கு தமதனுக்கிர ஹத்தால் சகலசம்பத்துகளு முண்டாயிருக்கின்றன ஆனாலிப்போதெ னக்குவேண்டிய வரமென்னவெனில் தாமென்னுடன் போற்செ ய்யவேண்டிய வரமெனக்களிக்க விரும்புகிறேனென அந்த பகவான் கேட்டு அப்படியே செய்யரிவோமென வரமளித்து அவ்வரக்க னுடன் போற்புரிந்திருக்கையில் அவன் தன் மாய்கையினால் அனேக இரதங்களையும் அசுவங்களையும் கெஜங்களையுமுண்டுபண்ணிக் கொண்டு அந்தச் சேனைகளுடன் வந்தனன் அபபோது ஸ்வாமியும் அரக்கனுமாகவனேககாலம் யுத்தஞ்செய்துகடைசியில் ஸ்வாமியான வர். விருஷபாசுரனை நோக்கி அடா அசுரனே இனிமேல் நம்மிடசுதர் சனமென்னும் சக்கிரத்தால் உனது சிரசைக்கண்டித்து விடுகிறோமெ ன்றுரைத்துக் கொண்டு கரத்தில் சக்கிரமேந்துகையில் அவ்வரக்கன் கண்ணுற்று எம்பெருமானை பலவாறுதுதிசெய்து ஸ்வாமிபூர்வத்தில் ஹிரணியாக்ஷன் ஹிரண்ணியகசிபு முதலானவர்க்கர்கள் தம்முடைய சக்கிரத்தினால் சங்கரிக்கப்பட்டு முக்தியடைந்தனர்களாதலால் யானும அப்படியேதமது சக்கிரத்தால் மிருதியுண்டுபரமடைகிறேனெனமொ ழிந்து மருபடியும் ஸ்வாமீ யான் இப்பர்வதத்தில் தவஞ்செய்து வந்த

மையால் இதுமுதலிப்பர்வதம் என்னுமதேயத்தால் பெயர்வழங்கப்படவேணுமென்று பிரார்த்திக்கையில் பகவானுமப்படியே அனுக்கிரஹஞ்செய்து அவ்வசுரனேச்சங்கரித்து முக்திகொடுத்தார். அதுமுதல் அப்பர்வதம் விருஷபாசலமென வழங்கப்படுகின்றது.

திரேதாயுகத்தில் அஞ்சனசல மென்பதற்குக்காரணம்.

திரேதாயுகத்தில் கேசரியென்னும் வானரசிரேஷ்டனுக்கு அஞ்சனுதேவியென்னுமொரு பத்தினி யிருந்தாள் அவளனேகபர்வதங்களிலும் வனங்களிலும் தன்பதியுடன்கூடி கிரீடித்துக்கொண்டிருந்து ஒருநாள் தனக்கு புத்திரனில்லாமல் போய்விட்டதென துயரம்மேற்கொண்டு ரிசியமூகமெனும் பர்வதத்திற்குச்சென்று அவ்விடத்தில் தபமாசரித்துகொண்டிருந்து மதங்கமாமுனிவரைக் கண்டு அவருக்கு தெண்டன் சமற்பித்து தனக்குபுத்திர உத்பவமாக தக்க உபாயஞ் சொல்லவேண்டுமென பிரார்த்திக்க அம்முனிவர் ஒரு முகூர்த்தகாலந் தியானித்துப்பிற்பாடு அந்த ஸ்ரீயுடன் ஓ பக்தியுடையவளே புலோகத்தில் தென்திசையில் தென்கைலாச மென்னுமொரு சிவக்ஷேத்திரமுண்டு அதற்கு மேற்கில் நாராயணகிரியென்னுமொரு பர்வதம் பிரகாசித்துக்கொண்டிருக்கின்றது நீ அவ்விடஞ்சென்று அப்பர்வதத்திலிருக்கும் ஸ்வாமி புஷ்கரணியென்னும் சரசுக்கு வடபார்சுவமாக இரண்டு நாழிகைவழிதூரத்தில் பிரவாகிக்கின்ற ஆகாசகங்கையில் ஸ்நானஞ்செய்து பர்த்தாவான கேசரியினுடைய சம்மதியைக் கைக்கொண்டவளாக அத்தீர்த்தத்தில் ஆஹாரமில்லாமல் ஓராண்டளவும் ஸ்ரீமந்நாராயணன் பாதாரவிந்தங்களையேதியானித்துதவம்புரிகையில் வாயுபகவான் அப்பெண்ணைக்கண்ணுற்று அவள் மீது கருணையுடையவராய் தினந்தோறு மொருகனியைக் கொண்டுவந்து அவளுக்குக் கொடுத்துக்கொண்டுவந்தனர் அவளதைவாங்கி பக்ஷித்து வருகையில் ஒருநாள் வாயுவானவர் தான் கொண்டுவருங்கனியில் தன் வீர்யத்தை நிருத்தி அப்பெண்ணுக்குக் கொடுக்க அவளதைவாங்கி அறியாமல் பக்ஷித்துவிட்டனள் அனந்தரம் அவ்வஞ்சனுதேவிக்கு கர்ப்பந்தரிக்கவவம்புரிகிற தனக்கெவ்வாருகர்ப்பம் உத்பவமாயிற்றென ஆலோசித்துக்கொண்டிருக்கையில் ஓ பெண்ணே நீயேன் வியசனப்படுகின்றாய் உனக்கு பகவதனுக்கிரஹமுண்டாய் உன்கோரிக்கை ஈடேறிவிட்ட தென்றொரு கேசரிவாக்காக அவ்வஞ்சனுதேவி

க்குகேழ்க்க அவள் ஆனந்தபரவசமடைந்தனள்.

அனந்தரம் அவள்கர்ப்பத்தில் பிள்ளைபிறந்து அதிகபாலியத்தில் தானே உதயமாகிக்கொண்டிருக்கிற சூரியனைப்பார்த்து அந்தசூரிய பிம்பம் சிவப்பாக பிரகாசித்ததினாலதை ஓர்கனியென்றெண்ணி அதைபக்ஷிப்பதற்காக சூரியமண்டலத்தைக்கிட்டிச் செல்லுகையில் இந்திரன்கண்டு தன்வஜ்ராயுதத்தா லச்சிசுவின் கன்னத்தில் மோத அப்பாலகன் அவ்வடிபொறுக்கமாட்டாமல் மூர்ச்சையடைந்து பாரினில் வீழ்ந்தான், இதைவாயுவுகண்ணுற்று மிக்க சினம்மீறி தான் சகலபிராணிகளுக்கு மாதாரமாகையால் தன்தேஹத்தை யசையவொட்டாமல் உருதியாய் பிடித்துக்கொண்டிருந்தனர், அப்போது இந்திரன் முதலாக ஸமஸ்த தேவதைகளும் வாயுவினருகிற்சென்று அவரைப்பலவாராகத் துதிசெய்து மூர்ச்சையடைந்து கிடக்கும் அப்பாலனை த்தேற்றி அனேகவரங்கள்கொடுத்து அஞ்சனாதேவியை அழைத்து நீதபஞ்செய்து புத்திரனைபோற்ற இப்பர்வதமிது முதலாக உன் நாமதேயத்தால் பெயர்வழங்கக்கடவதென வரமளித்துவிட்டு அவர்கள் தங்கள் லோகங்களுக்கெழுந்தருளிவிட்டனர்கள் ஆகையாலது முதலாக அப்பர்வதம் அஞ்சனாசலமென வழங்கப்படுகின்றது.

துவாபரயுகத்தில் சேஷாத்திரி யென்பதற்குக்காரணம்.

துவாபரயுகத்தில் லக்ஷ்மீ நாராயணர்களிருதரும் ஏகாந்தமாக இருக்கவெண்ணி ஆதிசேஷனை வழைத்து ஓய் சேஷா நீ துவாரத்தில் நின்று எவர்களையும் உள்ளேவரவிடாமல் பார்த்துகொள்ளுமென வாஞ்ஞாபித்தனர். அப்போது சேஷன் பகவதாக்ஞியா பரவசனாக துவாரத்தி லொருவரையும் வரவொட்டாமல் தடுதது நிற்கையில்வாயுபகவான் நாராயணமூர்த்தியை சேவிக்கும் பொருட்டு வைகுந்தத்திற்கு வந்து ஸ்வாமி வீற்றிருக்கும் பள்ளியறைக்குட் பிரவேசிக்கவருகையில் ஆதிசேஷன் அவரைப் போகவொட்டாமல்தடைசெய்தனன் வாயுவுசினங்கொண்டு ஓ துராத்மாவே முன்னால் ஜயம்விஜயன் என்பவர்களும் உன்போலவே துவார பாலகர்களாகயிருந்துஎன் பவர்களும் உன்னைப்போலவே துவாரபாலகர்களாகயிருந்து பகவானுக்கு அந்தரங்க பக்தர்களான சனகர்களை தடைசெய்து அவர்கள் சாபவிசேஷத்தால் பூமியில் அரக்கர்களாய் ஜன்மித்தனர்கள் அதுபோ லுனக்கும் அவ்விதசாபங்கிடைக்க பிராப்திகாலம் வாய்த்ததா

வென சேஷன்கோபமடைந்து, ஓவாயுவேநான் எப்போதும் பகவான் பாதசேவை எடுத்துக்கொண்டு அந்தரங்கத்தில் காத்துக்கொண்டிருப் பவனாதலின் இப்போது எம்பெருமான் நித்திரையிலிருப்பதால் நீ அந்தபுரஞ்செல்வது தக்கதன்று என மொழிந்தேன் அதன் பொருட் டென்னை இழிவு படுத்திச்சொல்லுவது யாதுகாரணமென வினவ, வாயுகேட்டு ஓசேஷ உலகத்தில்பூனை அரசர் மாளிகைகளில் வசிப் பினும் யானைவெளியில் கட்டப்பட்டதாயினும் அரசர்கள்வெளியிற் புறப்படுங்காலங்களில் மாளிகைகளில் இருக்கும் பூனையைத்தேடி வெளியில் துரத்திவிட்டு யானையை வலங்கரித்து எதிரில் கொண்டு வந்து நிருத்துவார்கள் அதுபோல நீ நிரந்தரம் அந்தரங்கத்தில் வசித் துக்கொண்டிருப் பவனாயினும் என்னுடன் சமானமாவாயோ வென தூஷணைசெய்து உரத்துச்சொல்லுகையில் அக்கூக்குரலை மஹாலக்ஷ்மிகேட்டு பகவானுக்கறிவிக்க அப்பொழுது எம்பெருமான் தமது அந்தபுரத்தை விட்டு துவாரத்தினருகிற்சென்று சேஷனைப்பா ர்த்து இஃதென்ன கலஹம்விளைகின்றதென்று மொழிகையில் அப் போது சேஷன் அஞ்சலீபத்தனாய் ஸ்வாமி வாயுவு அந்தபுரத்தில் பிரவேசிக்கவந்து என்னால் மருக்கப்பட்டவனாகி யென்னை நிந்திக்கிறான் இதுதான் கலஹமென விஞ்ஞாபிக்கையில் எம்பெருமான் வாயுவை கடாக்ஷித்து ஓய் சாந்தமும் பலபராக்கிரமும் பொருந்தி சம்பூஜ்யனாக் இருக்கும் உமக்கு மிக்க அஹம்காரமுடைய ஆதிசேஷனுடன் போர் என்ன காரணத்தால் நேரிட்டது எனக் கேட்டருள அ வ்வாக்கியத்தைசேஷன் கேட்டவனாய் எம்பெருமானை நோக்கி ஸ்வாமீ லோகத்தில் அடியேனைவிட பராக்கிரமத்தில் மிகுந்தவர்க ளொருவருமில்லையே அப்படிப்பட்ட அடியேனைவிட்டு அற்பபலமு டையவாயுவைத்துதிக்கின்ற தென்னகாரணம் அதை அடியேனுக் குரைக்கவேண்டுமென பிரார்த்திக்க ஸ்வாமி கண்டு அவன் கெர்வ மடக்கவெண்ணி ஓய் சேஷாவார்த்தைகளினால் பலாபலந்தெரியமா ட்டாது உங்களிருவர்களுடைய பலதுற்பலங்கள் தெரியவேண்டு மென்றால்யாமொரு உபாயஞ்சொல்லுகிறோம் அக்தென்னவெனில் ஜம்பூத்வீபத்தில் நிளாவருஷத்தில் மேருவின் புத்திரனாகியவிரு ஷபகிரியன்றோரு பர்வதமுண்டு நீ அவ்விடஞ்சென்று அப்பர்வத த்தை உன்தேஹத்தால்கயிறுபோல் சுற்றிக்கொள்ளுவாயானால் உன்

னை வாயுவு தூரத்தில் விசிறியெறிந்துவிட்டால் அவன் உன்னிலும்பல் முடையவனென்று அப்படிவீச அசமர்த்தனுய்விட்டால் வாயுவைப் பார்க்கிலும் நீ பலமுடையவனெனவும் தெரியவரலாமென ஆக்ஞியா பிக்கேஷன்கேட்டு அப்பர்வதம்சென்று தன்தேஹத்தினுலதைச்சு ற்றிக்கொண்டிருந்தனன்.; அப்போது வாயுவும அவ்விடத்திற் கேகி அப்பர்வதத்தைக் கண்ணுற்று தன்கால்கட்டை விரகிலாற்கிளப்பவது வாயுவேகமாக எழும்பி தென்தேசத்தில் பிரவாயித்துககொண்டிரு க்கிற சுவர்ன்னமுகரியென்னும் நதிக்குவடபுரத்திலிரண்டு நாழிகை வழிதூரத்தில் வீழ்ந்தது,

அப்போது வாயுவும்மறுபடியும் அப்பர்வதத்தைவீச எத்தனப் படுகையில் மேறுவாயு!விடஞ்சென்று அவரைப்பார்த்துஸ்வாமீ உமக் கு ஆதிசேஷ்ன் அபராதியேயல்லாது· வெனது புத்திரனாகியவிருக்ஷ பாத்திரி அபர்ாதியல்லவே ஆதலால் எனது புத்திரனை ஹிம்சிக்காம லிருக்கும்படி பலவிதங்களாக்பிரார்த்திக்கையில் அந்த வாயுவுபகவா ன் தயாஹிருதையனுய் அப்பர்வதத்தை அந்த இடத்தில்தானேநிறு த்திவிட்டனர். பிறகு ஆதிசேஷன் கொர்வபங்கமடைந்து வாயுவுக்கு நமஸ்கரித்து தான் வாயுவினுல் வீசப்பட்டதனுல் தேஹமெலாம் நசுங் கிமறுபடி வைகுந்தத்திற்குச்செல்ல லச்சையுடையவனுய் பகவதனு க்கிரஹம்பெற்று அப்பர்வதத்தில் தானே அந்தர்தானமாகிவிட்டன ன் அதுமுதல்ப்பர்வதத்திற்கு சேஷாத்திரியெனும் பெயர்வழங்கப் படுகின்றது.

கலியுகத்தில் வெங்கடாசல வென்னப்படுவதர்க்குக் காரணம்.

கலியுகத்தில் அப்பர்வதத்தின்மீது லோக இரக்ஷகரானநாராயண மூர்த்தி லக்ஷிமீ ஸமேதராக நிவஸித்துக்கொண்டு ஸமஸ்தமானவர் களுக்கும் மோக்ஷம்கொடுத்து வருவதினுல் அப்படிப் பட்டஜகத்ர க்ஷகரானபரமாத்மாவுக்கு வாஸஸ்தானமாகிதம்மை தரிசித்தமாத்தி ரத்தில் அவர்களுடைய பாபங்களை தஹித்துவருவதினுல் ஸமஸ்கிரு தத்தில் வெம் என்ருல் பாபம் கடம்· என்ருல் தஹித்தல் இவவர் த்தங்களால் வெங்கடாத்திரியெனப் பெயர்பெற்றிருகின்றது.

வராஹக்ஷேத்திரமென்னப்படுவதற்குக் காரணம்.

பூர்வகாலத்தில் திதீதேவியின் புத்திரனுன இரணியாக்ஷன் எனு

ம் அரக்கன் இப்பூமியைப்பாயாக சுருட்டிக்கொண்டு பாதாளலோகத்திர்க்குப்போய் விடுகையில் ஸமஸ்தமான தேவர்க்ளெல்லோரும் அதிகபயம்பிராந்தவர்களாகி க்ஷீராப்திக்குசசென்று க்ஷீராப்திசயனராவீற்றிருக்கும் ஸ்ரீமந்நாராயணமூர்த்தியை பலவாருக ஸ்தோத்திரஞ்செய்து அவ்வசுரன்விருத்தாந்தத்தை தெரிவிக்க பரந்தாமன்தயவு கூர்ந்தலய் அமரர்களே நீங்களென்றுச்சும் அஞ்சவேண்டுவதில்லை நான்வரகாவதாரஞ்செய்து அவ்வசுரனேச்சம்ஹரித்து விடுகிறேம் நீங்கள் சுவர்கத்துக்குச்செல்லுங்களென வாக்கியாபித்துவிட்டு பிறகு தாம் வராகவதாரம்பூண்டு பாதாளலோகஞ்சென்று அவ்விடத்தில் ஒளிந்துகொண்டிருக்கிற ஹிரண்யாக்ஷனேச்சங்கரித்து எமபுரத்துக்கனுப்பிவிட்டு இப்பூமியைக்கொணர்ந்து எதாரீதியாய்நிலை நிருத்தியதனல்சமஸ்ததேவதைகளும்பகவானேத்தோததிரஞ்செய்து இப்பூலோகத்தில்தானே ஸ்வாமியை நிவாஸமாயிருந்துகொண்டு ஸமஸ்தமானவர்களுக்கு ஸேர்வைகொடுத்து இரக்ஷித்தருளவேணுமென்று பிரார்த்தித்ததினல் எம்பெருமான் திருவுளமகிழ்ந்துகருத்மானே யழைத்து இப்போது வைகுந்தஞ்சென்று அவ்விடத்திலிருக்கும் நமது ஆனந்த விமானத்தைகொண்டு வரும்படிக்குக் கட்டளையிட அவரும் ஸ்வாமியின் ஆஞ்ஞையை சிரமேற்கொண்டு வைகுந்தஞ்சென்று நாராயணமூர்த்தி வீற்றிருந்த விமானத்தைக்கொணர்ந்து இவ்விடத்தில்பிரவஹங்கொண்டிருக்கும் ஸ்வர்ன்னமுகரீநதிக்கு வடக்கரையிலிருக்கும் சேஷாத்திரியின்பேரில்நிருத்த அப்பரந்தாமன் ஆனந்தமடைந்துசாந்தரூபமாய் செருடவிஷ்வக்ஸேன சேஷாதிசகல பக்தர்களுடனும் ஸ்ரீதேவி பூதேவிகளுடனும் விமானமத்தியில் எழுந்தருளி ஸமஸ்த தேவதைகளினுலும் பூஜிக்கப்பட்டவராய்க்கொண்டு அவரவர்கள் அபீஷ்டங்களின்படி ஸ்வர்கலோகத்திற் கனுப்பிவிட்டு தாம் பக்தபராதீனராகையினுலே கலியுகத்தில் ஸமஸ்தமனிதர்களுக்கும் தம்மைச்சேவித்து வருவதினுல் முத்திகொடுத்துககொண்டு அப்பர்வதத்தில் வீற்றிருப்பவராதலால் அதை வராஹ க்ஷேத்திரமென்னப்படுகின்றது.

அவ்விடத்தில் ஸ்வாமி வீற்றிருப்பதற்குக் காரணம்.

பூர்வகாலத்தில் னைமிசாரண்ணியத்தில் சௌனகாதி மஹாமுனி

களியாகஞ்செய்து கொண்டிருக்கையில் அவ்விடத்திற்குபிர்ம்மாவின் புத்திரரான நாரதர் எழுந்தருளி அவர்களைக்கண்டு ஓ சௌனகாதி முனிகளே லோகத்தில் பிரம்ம விஷ்ணுமகேஸ்வரர் இவர்கள்சிருஷ்ட்டிஸ்திதியை காரியங்களுக்கு கர்த்தர்கள்மூவர்கள் அவர்களில் யாரைக்குறித்து நீங்கள்யாகஞ் செய்கிறீர்களென வினவ, அம்முனிவர்கள்கேட்டு ஓய்நாரதரே இம்மூவர்களில் ஸத்துவகுணம் பிரதான முடையவனெவனோ அந்த பரந்தாமனை க்குறித்து யாகஞ்செய்கின்றோமென வம்முனிவர் அந்த பகவான் யாரெனவினவ அப்போது அம்முனிவர்களுக்குத்தெரியாமல் பிருகுமஹாரிஷியை அழைத்து ஓ ரிஷீஸ்வரரே நீர்பிரம்மலோகம் கைலாஸம் வைகுந்தம் இம்மூன்று லோகங்களுக்குஞ்சென்று அம்மும்மூர்த்திகளையுங்கண்டு அவர்களால் ஸத்வகுண பிரதானமுடைய வனெவனோ அவனை எங்களுக்குறிவியுமென வேண்டிக்கொள்ள அந்தரிஷிபர்கேட்டு முதலில்கைலாஸத்திற்குஞ்சென்றனர், அவ்விடத்தில் சாம்பசிவன் பார்வதியுடன் கிரீடித்துக் கொண்டிருந்தபடியா லந்தசமயத்தில் பிரகுமுனிவந்தாரெனக்கேபத்துடன் கண்களை வெருட்டிப்பார்க்கையில் அத்துடன் அம்முனிவர் இவர்தமோகுண பிரதானரெனவறிந்து அக்கைலாஸத்தைவிட்டு சத்தியலோகத்திற்குச் செல்ல, அப்போதவ்விடத்திற்பிர்ம்மதேவன் ஸரஸ்வதியுடன் கிரீடித்துகொண்டிருந்தனர் அச்சமயத்தில் பிரகுமஹாமுனி அப்பள்ளியறைச்சென்று அவருக்குச் சாஷ்ட்டாங்கதெண்டம் ஸமற்பித்து நிற்கையில் அவரைப் பார்த்து பிர்ம்மாவானவர்வசனியாமல் மௌனஞ்சாதித்தருளினர் அப்பொழுது அம்முனிவா இவர் ரஜோகுணபிரதானரெனவறிந்து அந்தலோகத்தைவிட்டு வைகுந்தத்திற்கு செல்லுகையில் நாராயணமூர்த்தி லக்ஷிமீஸமேதராய் சயனித்திருக்கையில் அவரைப்பார்த்து அம்முனிவர் தன் பாதத்தினல் சுவாமியின் மார்பிலுதைத்தனர். அப்பொழுது பகவான் சினமுறாமல் அம்முனிவரை அழைத்து குசலம் விசாரித்துஸந்தோஷகரமாய் அவரைபூஷித்தருளினர், அப்பொழுது அம்முனிவர்இவர்தான் சத்துவகுணப் பிரதானரெனவறிந்துக்கொண்டு மறுபடியும் னைமிசாரண்ணியத்திற்குவந்து சௌனகாதி முனிசிரேஷ்டர்களுடன் வைகுந்தவாசரான பரந்தாமன் ஸத்வகுணமுடையவரென வினவினர்.

அனந்தரம் இலக்ஷிமி பரந்தாமனுடன் ஸ்வாமீதாம் ஸகலஜகத் இரக்ஷகராக விருந்து பிருகுமுனிவராலுதையுண்டகினல் இனியன் இவ்வுலகம்விட்டு பூலோகத்திற்குச் செல்லுகிறேன் எனவியம்பிப்பெருமான் அனுமதிபெற்று பூலோகத்திற்குச்சென்று கோதாவரிதீ தீரத்தில் பிரகாசிக்கின்ற கொல்லாபுரத்தில்வீற்றிருந்தனா, அவ

ந்த ஸ்வாமி தாம்யாருடைய குமாரர் தமது பெயரென்ன இங்கு எழு ந்தருளின காரணம்யாது இவ்விவரங்களை அடியேனுக்குச்செரியச்சொ ல்லவேணுமென வினவ எம்பெருமான் அதிக மகிழ்ச்சியடையந்து அத்தோழியுடன் தனதுகுலம் சந்திரவம்ச பரம்பரையெனவும் க்ஷ த்திரயகுலமெனவும் வசுதேவன் தனக்குத்தகப்பன் தேவகிதேவிதா ய் தனதுபெயர் கிருஷ்ணனெனவும் தமயன்பெயர் பலபத்திரனென வும் தன்வாசஸ்தலம் வெங்கடாத்திரியென விருத்தாந்தத் துடனறிவித் து இவ்விடமிருக்கும் அரசன் மகளினது குலகோத்திரங்களை தமக கரிவிக்கும்படி கேட்க பத்மாவதிகேட்டு அதிகசினங்கொண்டு எனது தகப்பன் ஆகாசராஜன் யான் அவரினது மகள் என்பெயர் பத்மா வதி யென்பார்கள் எனவதட்டிச்சொல்லுகையில் பரந்தாமன் கேட்டு ஓபெண்ணே உலகத்தில் அன்னத்தை அபேக்ஷித்த மானிடருக்கு அன்னங்கொடுத்தவரே உத்தமரென சொல்லிக்கொண்டு இப்போது யாம் உன்பேரில் விருப்பங்கொண்டு இவ்விடம்வந்தோம் நம்மிடத்தி ல் தயையுள்ளவளாய் நம்மை ஆலிங்னஞ் செய்துக்கொள்ளென மொழிய அப்பெண்கேட்டு ஓய் உலகத்தில் சொல்லவாசங்களைச் சொல்லுகின்றீர். எனதுதகப்பனை ஆகாசராஜன்கேட்டால் உமது பிராணனைக்கைக்கொள்ளுவாரென பரந்தாமன் அவ்வாக்கியங்களை செவிகொள்ளாமல் குதிரையைவிட்டிரங்கி பத்மாவதியினருகில் எழு ந்தருள அவள் தன்தோழிகளுடன் பரந்தாமனை கற்களாலடிக்க எம் பெருமான் அவ்வடி பொருக்கமாட்டாமல் திரும்பி வேங்கடாதிரிக் கு எழுந்தருளி சிந்தாகிராந்தராக துயரமடைந்திருக்கையில் எம்பெ ருமானுக்கு அந்தரங்கபக்தியுள்ள வகுளமாலிகை என்பவள் ஸ்வாமி யால் அரணியத்தில் நடந்தவரலாற்றை செவியுற்றவளாய்க்கொண்டு ஆகாச இராஜனது நகரஞ்சென்று அவன்பத்தினியாகிய தரணிதேவி யுடன் ஸ்ரீமந்நாராயணமூர்த்தி வேங்கடாசலத்தில் வீற்றிருந்துக்கொ ண்டு உனதுமகள் பத்மாவதியைக்கண்டு மோஹமடைந்து அப்பெண் ணைமணம்புரியவேண்டிய பிரயத்தினங்கள் நடப்பிக்கும்பொருட்டு என்னை உம்மிடமனுப்பினரென மொழிந்து அவளைச்சம்மதிப்படுத்தி அவ்வரசன் புத்திரனான வசுதாஸனை ஸ்வாமியிடமழைத்துக்கொண் டுவந்து திருக்கல்லியாணமுகூர்த்தம் நிச்சயித்து அந்தமஹோத்ஸவத் திற்காக வீற்றிருக்கும்படி பிரம்மருத்திராதிகளுக்கு ஸமாசாரமனுப்

பியதில் பரமன் மிக்க ஆனந்தமடைந்து இந்திரன் முதலாக ஸகலதேவர்களுடன் தன்பத்தினியாகிய ஸரஸ்வதியுடனும் ஸத்தியலோகம் விட்டு ஹம்ஸவாஹனருடராய் அப்பர்வதத்துக கெழுந்தருளினர்கள். அப்போது ஈஸ்வரரும் பார்வதி ஸமேதராக குமாரவர்க்கங்களுடன் அவ்விடத்திற்கெழுந்தருளினர். அப்போது நாராயணமூர்த்தி தமது திருமணத்திற்காக நெடுநாளாகத் தம்மை பிரந்திருக்கிற ஸ்ரீமஹாலக்ஷ்மியை அவ்விடம் வரவழைக்கநினைத்து தமது மனோபீஷ்டத்தை பிரம்மாவுக்கறிவிக்கையில் அவர் குமாரசுவாமியை வரவழைத்து ஓய்லோகமாதாவாகிய இலக்ஷ்மி கொல்லாபுரத்தில் வீற்றிருக்கிறாளாகையால் நீரவ்விடத்திற்கேகி இங்கு எழுந்தருளிப் பண்ணிக்கொண்டு வரவேண்டியதெனக்கட்டளையிடுகையில், அக்குமாரஸ்வாமி கேட்டு ஸ்வாமியுடன் அவ்விடத்திலிருக்கும் இலக்ஷ்மியை அடியேன் எவ்விதம் எழுந்தருளப்பண்ணிக்கொண்டு வருவேனென மொழிகையில் அப்பரமன் அவருக்குச்சில உபாயங்கள் சொல்ல அதைக்கேட்டு அக்குமாரஸ்வாமி கொல்லாபுரஞ்சென்று அங்கிருக்கும் இலக்ஷ்மிக்கு நமஸ்கரித்து அவளுடன் பத்மாவதி திருக்கல்யாணமஹோத்ஸவத்தை சொல்லாமலே அதிசீக்கிரத்தில் அவரை அப்பர்வதத்திற் கெழுந்தருளப்பண்ணிக்கொண்டுவந்தனர் அப்போது வெங்கடாசலபதி பஹுகாலமாய்த்தம்மைப்பிரிந்திருந்த இலக்ஷ்மியைக் கடாக்ஷித்து ஆனந்தபரவசமடைந்து பிரம்மருத்திராதிகள் முதலான ஸமஸ்த தேவர்களுடனே அவ்விடத்தில் பிராமணர்களுக்கு பக்ஷிய போஜ்ய சோஷ்யலேஹ்யங்களுடன் அமுதளிப்பித்து அப்பர்வதம் விட்டு ஆகாசராஜ நகரத்துக்கெழுந்தருளி பத்மாவதியை மணம்புரிந்து மறுபடியும் அப்பர்வதம் வந்து அவ்விடத்தில் ஸ்வாமி புஷ்கரணி தீர்த்தத்தில் நிவஸித்துக்கொண்டிருக்கின்றனர்.

## பத்மாவதி விவாஹம்.

அனந்தரஞ் சிலகாலஞ்சென்றபின் சோழராஜனுக்கு ஆகாசராஜனென்றொருபிள்ளைபிறந்து அவன் தரணீதேவியென்னுமொருபெண்ணைமணம்புரிந்து அப்பத்தினியுடன் அனேகநாள் யோகஞ்செய்துவந்தும் ஸந்தானமில்லாமல் மிக்கவியஸன மடைந்துதமதுகுருவாக்யின்படி யாகஞ்செய்ய வெத்தனித்து அந்த யெக்யசாலையைவுழுகையில் அக்கலப்படை உழவுசாலிலிருந்து ஒருசுவர்ன்ன புஷ்ப

மும் அதினிடமாக ஒருபெண்குழந்தையும் காணப்பட்டது. அப்போது அரசன்கண்டு அக்குழந்தையை தன் பத்தினியிடங்கொடுத்து போஷித்துவரும்படிக்கட்டளையிட்டு அனந்தரம் எக்ஞியஞ்செய்கையில் அவ்வரசன் பத்னி கெர்ப்பந்தரித்து ஒரு புத்திரனை பெற்றனள் அப்பொழுது அரசன் அப்புதல்வனுக்கு வசுதானனெனவும் சுவர்ன்ன புஷ்பத்திலுதித்த சிசுவுக்கு பத்மாவதியெனவும் பெயர்கொடுத்து போஷித்துவருகையில் பத்மாவதி ப்ருவமுடையவளாய் ஒருநாள் தன்தோழிமார்களுடன் புஷ்பவனச்தில் பூமலர்க் கொய்துக்கொண்டிருந்தனள். அந்தசமயத்தில் நாராயணமூர்த்தி வேட்டையாடவெண்ணி நிற்கையில் எதிரிலொரு அசுவங்காணப்பட்டது. அதன்பேரிலேரிக்கொண்டு அவ்வரண்ணியத்தில் வேட்டையாடி. அப்பர்வதமிறங்கி கொஞ்சதூரஞ்செல்லுகையில் அவ்விடத்திலொருயானை அப்பரந்தாமனைக்கண்டு ஸ்வாமி அடியேனைக்காருமென முறையிடுகையில் அவ்விடத்தில்தோழிகளுடன்பூமலர்கொய்துக்கொண்டிருக்கும் பத்மாவதி எம்பெருமானுக்குக்காணப்பட்டனள் சரணமடைந்தயானையைக் காத்தருளி குதிரையினின்றிரங்கி பத்மாவதி யிடஞ்செல்லுகையில் அவளும் அவள்தோழிமார்களுங்கண்டு இவர்யார் இங்கேயேன்வந்தாரென பலவாருக சம்சயித்து பத்மாவதியும் தன்தோழிகளுடன் அவரினது வரலாற்றைக்கண்டு தெரிந்துகொள்ளும்படி கட்டளை யிட தோழிகள் அவரிடஞ்சென்று அவருக்கு தெண்டன் சமர்ப்பித்து சௌளோபனயனம் முதலான ஸமஸ்த காரியங்களை செய்தபின்னர் பிதாவிடத்தில் ஸகலவேத சாஸ்திரபுராண இதிஹாஸங்களைக்கற்றும் ஞானசம்பத்தை அடைந்தும் முன் செய்தபாபசேஷத்தால் பிர்ம்ம இராக்ஷஸ பிடித்து வனத்தில் சஞ்சரித்துக்கொண்டு இந்த வேங்கடாசலத்திர்க்குச் சமீபத்தில் பிரவாஹித்துக்கொண்டிருக்கிற சுவர்ன்னமுகரீ தீரத்துக்குவந்தனன்.

அப்பொழுது அந்த நதீதீரத்தில் தபஞ்செய்துக்கொண்டிருக்கிற அகஸ்தியமாமுனிவரைக்கண்டு அம்முனிவருக்கு நமஸ்கரித்து அஞ்சலீபத்தனாக நின்றுக்கொண்டு சுவாமி அடியேனுக்கு இந்த பிரம்மராக்ஷஸ்துவம் நீங்கும்படி உபாயஞ்சொல்ல வேண்டுமென பிரார்த்திக்க அம்முனிவர்கேட்டு அவனிடத்தில் கருணைபுண்டாய் ஓய் நீ இவ்விடத்துக்கு வடக்கில் சகலபாப நிவர்த்திக்க வேங்கடாத்திரியென்றொரு

பர்வதமுண்டு நீ அவ்விடஞ்சென்று அங்கு பிரகாசித்துக்கொண்டிரு. க்கறபாபவினசை தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்வாயானல் உன் பாபங்கள் நீங்கி பிரம்மராக்ஷகனுல் சம்பவித்த உபத்திரவங்கள் நீஙகுமென அனுக்கிரஹிக்க பிராம்மணன்கேட்டு மறுபடியும் அம்முனிவருக்கு நவஸ்கரித்துவிட்டு அப்பர்வதத்திர்க்குச்சென்று அவ்விடத்திலிருக்கும் பாபவினசதீர்தத்தில் ஸ்னானஞ் செய்து வேங்கடாசலபதிக்கு. தெண்டன் சமர்ப்பிக்கையில் சகல பாபநிவர்த்திகளும் பிரம்மரக்ஷாபவி முக்தியுண்டாய் கடைசியில் யோகிஜனதுர்லபமுள்ள ஸ்ரீனிவாசன் பாதாரவிந்த சேவை கிடைத்தது ஆகையால் இப்பொழுதும் அப்பாபவினசத்தில் ஸ்நானஞ்செய்த பேர்களுக்கு சகலபாப நிவர்த்திகளும் பரமபதவாசமும் உண்டாகின்றது.

## ஆகாசகங்கை உற்பத்தி.

பூர்வகாலத்தில் ஒரு பிராம்மணோத்தமன் தான் பகவத்கடாக்ஷத்தினுல் விஷ்ணுபதவியடைய வேணுமென்றெண்ணி வேங்கடகிரிக்கு. வந்து அவ்விடத்தில் நாராயணன் ஆக்ஞையால் லோகோபகாரத்தின்பொருட்டு வீற்றிருக்கும் ஆகாசகங்கையில் நீராடி நாராயணதியானபரனுக இருக்கையில் அவனுக்கு ஸ்ரீவேங்கடேசன் பிரஸன்னமாகி உனக்கென்ன வரம்வேண்டுமியம்புமென பிராமணன் தனக்கு விஷ்ணு ஸாலோக்கிய பதவிவேண்டுமென விரும்ப அதைபரந்தாமன் கேட்டு ஓய் நீ இன்னுங்கொஞ்சநாளைக்கு இந்த ஆகாசகங்கையில் மூழ்கிவெமை ஆராதித்துக்கொண்டிருப்பாயானல் அனந்தரமுனக்கு ஸாலோக்கிய பதவியுண்டாகுமென வரமளித்து அந்தர்தானமாய்விட்டனர் அந்த பிராமணன் அந்த தீர்த்தத்தில் ஸ்நானஞ் செயதுக்கொண்டிருந்து கடைசியில் பரமபதமடைந்தனன் அந்த ஆகாசகங்கை இப்பவும் அவ்விடத்தில் பிரகாசித்துக் கொண்டிருப்பதால் அத்தீர்த்தத்தில் சித்திரைமாஸம் சுக்லபக்ஷ பௌர்ணமியதினம் ஸ்னானஞ் செய்து ஸ்ரீனிவாஸமூர்த்தியைஸேவித்தால் அப்படிப்பட்டவர்களுக்கு. இஹபரங்களில் ஸகலஸம்பத்துகளும் ஸகலரோக நிவாரணங்களும். பரத்தில் பரமபதவாசமும் உண்டாகும்

## பாபவினசை தீர்த்தமஹிமை.

பூர்வகாலத்தில். வேருவுக்கு வடபுறத்தில் ஸமஸ்தமுனிகளும். தபஞ்செய்துகொண்டிருக்கையில் அவ்விடத்திர்க்கொரு: [ருத்திரன்

வந்து அம்முனிவர்களுக்கு தெண்டம்ஸமர்ப்பித்து கைகட்டி நின்று கொண்டு அவர்களைப்பார்த்து ஸ்வாமி யான் சூத்திரன் தபஞ்செய்ய வெண்ணியிருக்கிறேன். ஆகையாலெனக்குமந்திரோபதேசஞ் செய்து என்னை இரக்ஷியுங்களெனவேண்ட அம்முனிவர்கள்கேட்டு நீ சூத்திரன் ஆகையால் உனக்கு மந்திரோபதேசஞ்செய்யலாகாது நீ நிரந்தரம் தவபிராமணர்களுக்கு பக்தியுடன் சேவைசெய்துக்கொண்டு வருவாயானால் உனக்குப் பரமபதங்கிடைக்குமென்றுசொல்ல அச்சூத்திரன் அவ்விடத்திலொரு பூந்தோட்டம் ஏர்படுத்தி அவ்வனத்தில் புஷ்பிக்கும் பூமலர்களை பிராமணர்களுக்கும் தேவதைகளுக்கும் ஸமர்ப்பித்து அவர்களுக்குச்சேவை செய்துகொண்டிருந்தனன். அச்சமயத்தில் அவ்வாசிரமத்தில் தபஞ்செய்துகொண்டிருக்கும் சுமதியெனெருரு பிராமணன் அச்சூத்திரனுடைய பூந்தோட்டத்திர்குப் போகையில் அவன் கண்டு பிராம்மணருக்கு அர்க்கியபாத்தியசமநீயங்கள் சமர்ப்பித்து அதிகபக்தியுடன் ஸகல சிசுரூஷைகளும் செய்தபின் பிராம்மணன் ஸந்துஷ்டியடைந்து அதிக சினேஹத்தால் நித்தியமும் அப்பூவனத்திற்குப்போய்க்கொண்டிருந்தனன். அப்படியிருக்க ஒருநாள் அச்சூத்திரன் அவருக்கு நமஸ்கரித்து ஸ்வாமீ அடியேனுக்கு மந்திர இரஹஸ்யங்களை போதிக்கவேண்டுமென பிரார்த்திக்க அவர் அவன் செய்யும் சிசுரூஷைகளுககுச் சந்துஷ்டியடைந்து அவன் வார்த்தைகளை நிக்கிரஹிக்ககூடாமல் அவனுக்கு பஞ்சாக்ஷரி அஷ்டாக்ஷர முதலியமந்திர இரஹஸ்யங்களை உபதேசித்து இவனல் வேதோக்த பிரகாரமாக தேவபித்ருகாரியங்களைச செய்வித்து அச்சூத்திரன் கொடுத்துக்கொண்டுவரும் திரவியமூலமாய் ஜீவித்துவந்தனன். அனந்தரம் கொஞ்சகாலத்துக்குப்பின் மிருதிபடைந்து அப்பாபத்திற்குத் தக்கின நரகங்களை அனுபவித்து கிருமீகிடாதி துர்யோனிகளில் சிலஜன்மங்களெடுத்து அப்பாபங்களெல்லாம் கழிந்தபின்னர் ஒரு பிராம்மணனுக்கு புத்திரனுக பிறந்து ஜாதகர்ம நாமகரணம் அன்னபிராசனமனந்தரம் இருபத்தெட்டாவது துவாபரயுகத்தில் லக்ஷ்மீநாராயணன் லக்ஷ்மியினது மோஹாந்தகாரத்தைப் பெருக்கமாட்டாமல் வைகுந்தத்தைவிலகி | பூலோகத்திற் கெழுந்தருளி அவ்விடத்தில் லக்ஷ்மியைத்தேடிக்கொண்டு கெங்காநதிக்குத்தெற்கில் இறுநூறுயோசனை தூரத்தில் பிரவாஹிக்சின்ற சுவர்ன்னமுகரிபெனும்நதிக்கு வடபுற

த்தில் இரண்டுநாழிகைவழிதூரத்தில் முன்னால் வைகுந்தத்தில் ஆதி சேஷனும்வாயுவும் போற்செய்து ஆதிசேஷனால் பூலோகத்துக்கு கொண்டுவந்த சேஷாசலத்தை கடாக்ஷித்து இது தாம்நிவஸிக்க வைகுந்தத்தைவிட ஆனந்தகரமாக இருக்கிறதென்றெண்ணி அவ்விட த்தில்தானே துவாபர யுகாந்தம் வரையில் ஓர்புற்றினி லொருவருக் குந்தெரியாமல் வீற்றிருந்தனர்: அனந்தரம் கலியுகவாரம்பத்தில் சோழராஜன் புத்திரனான தொண்டமான் சக்கிரவர்த்தியெனு மரசன் நியாயமார்க்கந்தவறாமல் இராஜ்ய பரிபாலஞ்செய்து க்கொண்டிருந் தனன். அப்போது ஸ்ரீ மஹாலக்ஷ்மி எவர்களுக்குந்தெரியாமல் புற்றினில் வீற்றிருக்கும் நாராயணமூர்த்தியை ஸகல பிரஜகளுக்கு தெரிவிக்கவெண்ணி பரமனை ஓர் பசுவாகவும் ஈஸ்வரனைக் கன்றாக வுஞ்செய்து தாம் கோபிகைபாக வேஷம்பூண்டு அப்பசுவையோட்டி கொண்டுவந்து இராஜ்யபாலகனாகிய தொண்டமான் சக்கிரவர்த்திக்கு விக்கிரயித்து தாம் அந்தர்தானமாய்விட்டனர்.

அனந்தரம் பசுவானது மேச்சலும் பொருட்டு நித்தியமும்சேஷாத்திரிக்குப்போய் அவ்விடத்தில் பரந்தாமன் மறைவுண்டிருக்கும் புற்றினில் தன்பாலை அபிஷேகஞ்செய்து வீட்டிற்குவந்துக்கொண் டிருக்கும், இப்படி இருக்கையி லொருநாள் அவ்வரசன் பத்னிபசுமேய்ப்போனை அழைப்பித்து தாம்கொண்டபசு நித்தியமும்பாலில்லா மல் வரண்டுகிடக்க காரணம்யாது அப்பாலையெவர்கள் குடித்துவருகிறார்களென தடிகொண்டடிக்க அவ்விடயன் துக்கித்து மறுநாளுதயத்தில் அப்பசுவின் கழுத்திலொரு கயிருகட்டி அப்பசுவைகெட்டியாக கையினிற் பற்றிக்கொண்டு அப்பர்வதத்திக்குச் சென்றனன். அப்போது பசுவானது நித்தியமும் தான் அபிஷேகஞ்செய்கின்றவிதமாக அப்புற்றினில் தன் பாலைகரந்தது அதைக்கண்ட அவ்விடையன் மிக்ககோபமடைந்து தன்கையிலிருக்குங்கோடலியால் அப்பசுவை அடிக்கபோகையில் அந்த பகதான் மேலாகத்தில் மனிதர்கள் பக்தியுடன் துளஸீதளங்கள்கொண்டு பூஜிக்கப்படுவதினாலேயே அவர்களின்விபத்தை நிவாரணைசெய்யும் சுபாவ குணமுடையவராதலின், நித்தியமும்தமக்குபக்தியுடனே க்ஷீராபிஷேகஞ்செய்துவருகிற அப்பசுவை இரக்ஷிக்கவெண்ணி அவ்விடயன் கைக்கோடாலியின் அடியைத்தாமேந்திகொண்டு அப்பசுவை இரக்ஷித்தருள பரந்தாமனது

சிரசினிலிருந்து இரத்தப்பிரவாஹம்வெளியிட அதுகண்டு அவ்விடையன் பரலோகப்ராப்தி அடைந்தனன்.

அனந்தரம் அப்பசு பர்வதமிரங்கி அரசனிடஞ்சென்று தரையில்வீழ்ந்துபுரளுகையில் அவ்வரசன்கண்டு இதென்ன வதிசியமென்றெண்ணி அப்பசுவினிடமாக ஒருதூதனையனுப்ப மறுபடியும் பசுவானது அத்தூதனுடன் மலைக்குச்சென்று அவ்விடத்தில் மாண்டுகிடக்கும் கோபாலனிடம்நின்றது அப்போதுதூதன் அக்கோபாலனையும்புற்றினிடமாக உற்பத்தியாயிருக்கும் இரக்த பிரவாஹத்தையுங் கண்டு ஆச்சர்யமடைந்து சீக்கிரமாக அரசனிடத்திற்சேகி அவருடன் இவ்விருத்தாந்தங்களைதெரிவிக்க அரசனும் சீக்கிரமாக வெழுந்திருந்து அவ்விடஞ்சென்று அந்த இரத்த வெள்ளத்தைக்கண்டு மிக்க பயமடைந்திருக்கையில் பரந்தாமன் புற்றைவிட்டு அவ்வரசனுக்கு சேவைதந்து ஒ துராத்மாவே நீ பிரபுத்துவஞ்செய்துவருகையில் எனையனியாயமாய் இடையினைக்கொண்டு அடிப்பித்தா யாகையால் நீ எப்போதும் சிங்காசிராந்தனாக இருக்கக்கடவாயென சாபமளித்தனர். அப்போது அரசன் பலவாறாக ஸ்வாமியைத்துதித்து ஸ்வாமி நிரபராதியாகிய அடியேனுக்கு தாம் விசாரியாமல் இப்படிக்குச்சாபமளிக்கலாமாவென வேண்டிக்கொள்ள அக்கடவுள் மனமிரங்கி நாம் உனதுமனதையறியாமல்சாபமளித்துவிட்டனன். ஆயினும் ஆகாசராஜனென பிரஸித்தமுடைய ஒருபுத்திரனுண்டாய் அவனுக்கு பத்மாவதி எனுமொருபெண்பிறந்து அக்கன்னிகையை நமக்குத்தந்து விவாகஞ்செய்யப்போகின்றனன் ஆகையால் அக்காலத்தில் உனது வியசனந்தீருமெனவனுக்கிரஹித்து அச்சாபவிமோசனமாகுங்கால நிர்ணயமுங் குறித்துவிட்டு தமது சிரசினிலுண்டான காயத்துக்கு ஔஷதஞ்செய்ய அவ்விடத்திற்கு பிரஹஸ்பதியை வரவழைத்து அவர்வாக்கின்படி அற்றிபாலைக்கொண்டு எறுக்கம்பஞ்சை நனைத்து அக்காயத்தின்மீது வெய்து அனந்தரம் அவ்விடத்தில் ஸ்வாமி புஷ்கரணி தீரத்திலிருக்கும் புளியமரத்தினடியில் புற்றினில் பிரவேசித்து சிலகாலஞ்சென்றபின் வராஹமூர்த்தியின் அனுமதியால் இப்போதுங் கூடதமது பக்தர்களுக்கு ஸர்வா பீஷ்டமும் கொடுத்துக்கொண்டு அவரவர்கள் கொண்டுவரும் தனங்களை யெல்லா மகரிஷித்துக்கொண்டவராக தம்மை ஸேவிப்பவரினது பாபங்களை ஹரித்துக்கொண்டு

வேங்கடாசலபதியெனும் நாமதேயத்தால் பிரஸித்தி யடைந்திருக்கின்றது.

## பாண்டவ தீர்தோத்பத்தி.

துவாபரயுகத்தில் பாண்டுராஜாவின் புத்திரர்களான தர்மபுத்திராகள் சூதாடி இராஜ்யத்தையிழந்து விட்டுவனவாசம்செய்துக்கொண்டு இருக்கையில் அவ்விடத்திற்கு நாரதரெழுந்தருளினர் பாண்டவர்கள் அவரைக்கண்டு அர்க்கியபாத்தியாசபநீயங்கள் கொடுத்து தெண்டன் சமர்ப்பித்து ஸ்வாமி தாங்களிவ்வரணியத்தில் சகல கஷ்டங்களையு மனுபவித்துக்கொண்டிருக்கின்றனம் ஆகையால் எங்கள் கஷ்டம் எவ்விதம் நிவர்த்தியாகுமெனவேண்ட நாரதமுனியானவர் அவர்கள் துக்கத்தை கண்ணுற்று அவர்கள் மீது கருணைபூண்டு ஓய் பாண்டவர்களே இவ்விடம் மேற்கு பத்துகாததூரத்தில் அனேக தீரத்தங்களினால் பிரகாசித்துக்கொண்டு வேங்கடகிரியெனு மொருபர்வதமுளது நீங்களவ்விடஞ்சென்று அங்குள்ள புண்ணிய திர்த்தங்களில் ஸ்நானஞ் செய்து அப்பர்வதத்தை பிரதக்ஷணஞ் செய்வீர்களானல் உங்களுக்கு ஸ்ரீநிவாஸ ரனுக்ரெஹத்தால் இராஜயங்கிடைத்து சகல கஷ்டங்களும் நிவாரணமாகுமென மொழிய அப்பாண்டவர்கள் கேட்டு ஆனந்தமடைந்து அப்பர்வதஞ்சென்று அங்கிருக்கும் ஸகல தீர்த்தங்களிலும் ஸ்நானஞ்செய்து அப்பர்வதத்தை பிரதக்ஷணஞ்செதபின் அங்குள்ள மற்றொரு தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து விட்டு அத்தீரத்தில் நாராயணதியான பரர்களாயிருக்கையில் அவர்களுக்கு ஸ்ரீநிவாசமூர்த்தி பிரஸன்னராகி. ஒ பாண்டவர்களே உங்களுக்கு சீக்கிரமாக யுத்தத்தில் சத்துருஜயலாபமும் உண்டாகுமெனவும் நீங்கள் ஸ்நானஞ்செய்த அத்தீர்தம் உங்கள் நாமதேயத்தால் பெயர்வழங்கப்படு மெனவும் வரமளித்து அந்தர்த்தானமாய்விட்டனர். அனந்தரம் பாண்டவர்கள் ஸ்ரீகிருஷ்ண சஹாயத்தால் யுத்தரங்கத்தில் சத்துரு ஜயமடைந்து தமது ராஜ்யத்தையுங் கைக்கொண்டு சுகித்தனர்களாதலால் அச்சரோவரம் பாண்டவதீர்த்த மென்னப்படுகின்றது.

## கபில தீர்த்தோத்தி

பாதாளலோகத்தில் கபிலமாமுனிவர் அனுதியாய்ப்பூஜித்து வந்தலிங்க மொருநாள் பூமியை பிலந்துகொண்டு வெளிப்பட்டிருக்க பிரம்மா முதலான ஸமஸ்ததேவர்களும் அவ்விடம் வந்து அந்தலிங்கத்திற்கு பூஜாபிரதக்ஷண நமஸ்காரங்கள்செய்து பரமசிவனை தியானிக்கையில் ஈசுவரன் அவர்களுக்குப் பிரஸன்னராகி நீங்களென்ன வபேக்ஷிக்கிறீர்களியம்பங்களென அத்தேவதைகள் கேட்டு ஸ்வாமி தாமிவ்விடத்தில்தனே நிவஸித்துக்கொண்டு ஸமஸ்தமானிடர்களுக்கும் சேவை தந்துகொண்டிருக்கவேண்டுமென பிரார்த்திக்க பரமசிவன் கேட்டு ஒ வானவர்களே இப்போது பூமியை பேதித்து உதித்த லிங்கத்தை இவ்விடத்தில் பிரதிஷ்டை பண்ணிவைத்தால் அதில்யாம் நிவஸிக்கிறோமெனமொழிய அத்தேவதைகள் அந்த லிங்கத்திற்காலயமியற்றி அதில் பிரதிஷ்டைசெய்தனர்கள். அனந்தரம் கபிலமாமுனிவர் பாதாளத்தில் தாம் நித்தியமும் பூஜித்துவருகிற லிங்கத்தைக் காணுமல் சிலகாலம் வியாகூலமடைந்திருந்து பின்பு கியானதிஷ்டியால் அந்த லிங்கம் பூலோகத்திற்குப்போய்விட்டதென அறிந்துகொண்டு தாமும் பூமியில் பிலஞ்செய்து அவ்வழியாகவே பாதாவகங்கையைக்கொண்டுவந்து லிங்கத்திற்கபிஷேகம் பூஜாபிரதக்ஷண நமஸ்காரங்கள் செய்து இப்போது மவ்விடத்தில்தானே அதிருசயனராக ஆராதித்துக்கொண்டிருக்கின்றனன், ஆகையாலது கபிலேசுவாரெனவும் அவ்விடத்திற்கு கபிலமுனிவர் கொண்டுவந்த பாதாளகங்கை கபிலதீர்த்தமேனவும் பிரஸ்த்தியடைந்திருக்கின்றன.

## இந்திரதீர்த்தமுதலிய ஒன்பதுதீர்த்தங்களின்மஹிமை

பூர்வகாலத்தில் இர்திரன் விமானமேறி பூஸஞ்சாரஞ் செய்துக்கொண்டு கௌதமாசிரமத்திர்க்குவந்தனர், அச்சமயத்தில் அம்முனிவருக்கு பத்தினியாகிச அஹலியை ஸ்நானஞ்செய்துவிட்டு தலை மயிராற்றிக்கொண்டிருந்தனள், இந்திரனவளைக்கண்டதிக மோஹமடைந்து அவ்விரவு வனத்தில் பொழுதுபோகவிட்டு இராத்திரிமூன்ருவது ஜாமத்தில் ஒரு சேவலைப்போல் ஒலிசெய்தனன், அவ்வொலியைக்கேட்ட கௌதமர் அருணுேதயகாலமாய்விட்டதெனத் துயிலெழுந்து கமண்டலமெடுத்துக்கொண்டு ஸ்நானஞ்செய்ய போகிற அவசரத்தில்

இந்திரன் இது நல்லசமயமெனக்கருதி அம்முனிவரின் பர்ன்னசாலேக்கேகி அந்தஸதிரீயைவார்த்தைகளினுல் மோசஞ்செய்து அவளுடன் ரமிக்கையில்அம்முனிவர் நதீ தீரத்திற்குச்சென்று நக்ஷத்திரங்களேப்பார்த்து இதுவென்னவதிசயம் இராத்திரிமூன்றாவது ஜாமத்தில்தலனேகுக்குடதுவனி செவியுற்றதென சிலநேரந்தியானித்து இதுஇந்திரன்செய்த மோசமென வறிந்துக்கொண்டு சீக்கிரத்தில் திரும்பிபர்ன்னசாலேக்கு வருகையில் இந்திரனும் அஹலியுடன் ரமித்துவிட்டு அக்குடீரத்தைவிட்டு ஸ்வர்க்கலோகத்திற்குபோக உத்தேசித்தவனுஇருந்தனன். அப்போது அம்முனிவர் அவனேக்கண்டு ஓ துராத்மாவேஷீ எமைமோசஞ்செய்து இப்படிப்பட்டதுஷ்ட்டகாரியத்தைசெய்தபடியால் இப்பாபத்தாலுனது விருஷணங்களறுப்புண்டு பூமியில்விழக்கடவையெனசாபங்கொடுத்துதன்பத்னியாகிய அகலியைக்கண்டு நீ இவ்வித துன்மார்க்கியாயிருப்பதால் எவர்களுக்குந்தெரியாமல் கல்லாகக்கடவாய் என சபித்து இனிமேல் கொஞ்சகாலத்தில் தசரதமஹாராஜருக்கு ஸ்ரீமந்நாராயணமூர்த்தி புத்திரனுகப்பிறந்து பிராமனெனும்நாமம்பூண்டு சீதையைமணம்புரிய விசுவாமித்திரருடன் ஜனகமாநகரத்துக்குப்போவதன்பொருட்டு இவ்வனத்திற் கெழுந்தருவப்போகின்றனர் அச்காலத்தில் இராமன்பாததூள் உன்பேரில்பட நீ நிஜரூபமடைந்து நம்மிடஞ்சேருவாயென அனுக்கிரஹித்துவிட்டு அப்படிபட்ட துஷ்டிவுடஅ சம்பாஷித்ததினுல் தனக்குண்டான பாபம்துலேவதற்காக தீர்த்தயாத்திரைகள் செய்லாமெனபுண்ணிய க்ஷேத்திரங்களுக்கு ச்சென்றனர். அனந்தரம் இந்திரன் முனிசாபத்தால் விருஷணமற்றவனுய்வெட்கமடைந்து சுவர்க்கலோகத்துக்குப்போகாமல் பூலோகத்திலிருந்தனன், அப்போதுஇந்தவிருத்தாந்தத்தை அரக்கர்களறிந்து இப்போது ஸ்வர்க்கத்துக்கு இரக்ஷகனில்லாத தால் தாம்இந்திரலோகத்தை ஆக்கிரமித்துக்கொள்ளலா மெனக்கருதிசமஸ்த்த சைன்னியங்களுடனே ஸ்வர்க்கத்சுர்க்கருகாமைபிற்செல்ல அவ்விடத்திலிருக்கும் இமரர்கள் அரக்கருடன் போர்புரியசக்த்தியற்றவர்களாகி இந்திரனேத்தேடிக்கொண்டுஎல்லாலோகங்களிலும் தஞ்சரித்துவிட்டு இந்த பூலோகத்திலொருவனத்தில் விருஷணஹீனராக யிருப்பதால் வெளியில்வர வெட்கமடைந்திருக்கின்ற அவ்விந்திரனேக்கண்டு அவனே அழைத்துக்கொண்டு சேஷாத்திரிச்னிச்சென்று அவ்விடத்திலொரு தீர்த்த

முண்டுபண்ணி அதில் அவனைமூழ்கச்செய்வித்து அவன்பாபநிவத்தி யடைந்தபின்பு வேங்கடேசுவரருக்கு நமஸ்கரித்து அடராதுக்கிறஹ த்தால் சுவர்க்கலோகத்திற்குச் சென்றனன், ஆகையால் அவ்விந்திரன் ஸ்நானம்செய்த தடாகம் இந்திரதீர்த்தமெனவும் வருணன்குமாரன் ஸ்நானஞ்செய்து பகவதனுக்கிரஹம் பெற்றதீர்த்தம் விஷ்வக்சேன தீர்த்தமெனவும் ஸ்ரீ விஷ்ணுவினுடைய சங்கம் சக்கிரம் கதை கட்கம் சாரங்கம்முதலிய ஐந்தரயுதங்களும் ஸ்நானஞ்செய்த ஸரோபஞ்சாயுத தீரத்வமெனவும் பிரம்மாசிருஷ்ட்டி சாமர்த்தியத்தை அடைவதன்பொ ருட்டே வேங்கடாத்திரிக்குவந்து ஒருதீர்த்தத்தை உண்டுபண்ணி யதில்நீராடி ஸ்ரீநிவரசமூர்த்திக்கு நம்ஸ்கரித்து அந்தசுவாமியனுக்கி ரஹத்தால் ஜகத்சிருஷ்டிகர்த் தவ்வியத்தை அடைந்தனராகையால் அதுபிரம்மதீர்த்தமெனவும் காசிபர்முதலாக சமஸ்தத்த மஹாரிஷி களும் ஸ்நானஞ்செய்தபரசு சப்தரிஷிதீர்த்தமெனவும் சொல்லப் படுகின்றன.

## தொட்டி தீர்த்தோத்பத்தி.

பூர்வகாழத்தில் துங்கயத்திரா நதீதீரத்திலொரு அக்கிராரத்தில் பத்மநாபனென்றொரு பிராம்மணன் சகலவேதசாஸ்திரபுராண இதி ஹாசங்களைக்கற்று அவற்றில் சொல்லப்பட்டிருக்கும் தர்மகாரியங்களை ச்செய்து புத்திரனில்லாமல் அனேகநாள் அந்தநதிதீரத்தில் சிவார்ச் சனைசெய்துக்கொண்டிருந்து சிவானுக்கிரஹத்தா லொரு புத்திரனை ப்பெற்றனன், அந்தபுத்ரன் வயதுவந்தபின் கலியாணம் செய்துக்கொ ண்டுதன்மனைவியைவிட்டு தாய்தந்தையர் சொற் கேளாமல்விட புரு ஷாகளுடன்கூடி ஸகவரசஞ் செய்துக்கொண்டு ஒருதாஸியைச் சேர் ந்து அவளுககுத்தன்வீட்டிலிருக்குந்தன மெல்லாங் கொடுத்துவிட்டு பின்பு திரவியமில்லாமையால் திருடர்களுடன்கூடி அரணியத்திடை யிலிருக்கும் கிராமங்களில் களவுசெய்துக்கொண்டு அந்ததாஸிக்குக் கொடுத்துவருகையில் ஒருநாளொருபிராம்மணன்வீட்டிற்பிரவேசித்து அவனைக்கொலைசெய்து அவ்வீட்டிலுள்ள ஸம்ஸ்த திரவ்வியங்களையும் அபஹரித்தனன், அப்போதுஅவனுககு பிரம்மஹத்திஉண்டாய் மிக வும் பாதிக்கையில் அந்த பிராம்மணன் அந்தபாதைகளைப் பொருக்க மாட்டாமல் தன்பிதாவிடஞ்சென்று அப்பா அடியேனைஇரக்ஷியுமென

வேண்ட, அவன் தகப்பன்கேட்டு தனக்கொருபிள்ளைபிறந்து இவ்வித பாபங்களை அனுபவிக்கின்றன னுகையால் அவைகளெவ்விதம்நிவர்த்தி யாகுமென துயரங்கொண்டிருக்கையில் அவ்விடத்திற்கு தபோநிதி யானபரத்துவாச மாமுநிவர்தைவவசத்தால் அவ்விடம் எழுந்தருள அந்தபிராம்மணன்கண்டு ஓய் பிராம்மணு நீயேன் விசனப்படுகிறுய் உமதுவிசனத்தை எமக்கறிவிசுமென பிராம்மனன் அம்முனிவரைப் பார்த்து அவருக்கு தெண்டன் சமர்ப்பித்து தன்குமாரன் செய்திருக் கும் பாபத்தையும் அதனுல்அவன்படுகிற துன்பத்தையும் இக்காரணங் களால் தனக்குண்டாயிருக்கிறதுக்கத்தை அம்முனிவருக் கறிவித்த னர், அதைக்கேட்டு அம்முனிவர்கொஞ்சகாலந் தியானித்துபிற்பாடு அந்தபிராப்மணனுடன் ஓய்பிராம்மணு காசி க்ஷேத்திரத்திற்குத் தெற்குநூற்றைம்பதுகாத வழிதூரமும், கிழக்கு சமுத்திரத்திர்க்கு மேற்குபதிங்காதவழி தூரமும்பொருந்தி சுவர்ன்னமுகரியெனும் நதி க்குவடக்கில் இரண்டுநாழிகை வழிதூரத்தில் ஸ்ரீநிவாஸமூர்த்திக்கு வாஸஸ்தானமாய் ஸமஸ்த புன்னியதீர்த்தங்களிஞல் பிரகாசித்துக் கொண்டு வேங்கடாசல மெனபிரஸித்தி யடைந்தொருபர்வதமுள்து அங்குநித்தியமும் ஸ்ரீநிவாஸமூர்த்திக்கு அபிஷேகஞ்செய்கிறதீர்த்த மெல்லாமொரு பிரதேசத்தில்சேர்ந்து அது ஸமஸ்கிருதபாஷையினல் கடாஹதீர்த்தமெனவும் திரவிடபாஷையினல் தொட்டிதீர்த்தமென வுஞ்சொல்லப்படுகின்றதுமற்ற ஸமஸ்த தீர்த்தங்களும் பகவான் பா தத்தின்பேரில் சேர்ந்தொரு பிரதேசங்கூடுவதால், பிரம்மஹத்தி முத லிய மஹாபாதங்களும் நாசமாய்விடு மாதலால் நீ என்புத்திரனை அ ழைத்துக்கொண்டு அப்பர்வதஞ் சென்று அக்கடாஹ தீர்த்தத்தில் அவனுக்கு ஸ்நானஞ் செய்வித்தால்சகலபாபங்களுந் துலைந்துவிடுமென மொழிந்துவிட்டு அந்த ருஷிபர் தனதுதபோவனத்திர்க்கேகினர். அன ந்தரப் அந்த பிராம்மணேத்தமன் மஹாபாதகனைதன்குமாரனையழை த்துக்கொண்டுஅப்பர்வதஞ்சென்று அவனை கடாஹதீர்த்தத்தில் ஸ்நா னஞ் செய்வித்து ஸ்ரீநிவாஸமூர்த்திக்குப் பிரதக்ஷணஞ்செய்வித்து அத்தீர்த்தத்தைப் பானஞ்செய்கவெனவாக்கியாபிக்கையில் அப்புத் திரன் பகவானுக்குப்பிரதக்ஷணநமஸகாரஞ்செய்து பகவானதுபாதோ தகமானகடாஹதீர்த்தத்தைப்பானஞ்செய்து பலவாறுகத் துதிசெய் கையில் அவனுக்குப்பரந்தாமன் பிரஸன்னமாகி, ஓய் நீ இந்ததீர்த்தத்

தைப்பானஞ்செய்தபடியால் உன்பாபங்களெல்லாந் துலேந்துவிட்டன. லோகத்தில் எந்தமனிதனுவது இந்ததீரத்தத்தில் விசுவாஸமில்லாமல் பானஞ்செய்யாபற்போனுல் அவன் பிரம்மஹத்தியாதி மஹாபாபங் களுக்குச்சமானமான பாபங்களேயடைவனுதலால் இங்யதீர்த்தத்தை எப்படிப்பட்ட மஹாத்மாவானுலும் சம்சயம் நீங்கிபானஞ்செய்யவே ண்டியது, அப்படி பானஞ்செய்பவர்கனுக்குச் சகலபாப நிவர்த்தியும் ரோகநாசமும் இஷ்ட்டஸித்தியும்உண்டாகுமென மொழிந்து அந்தர் த்தானமடைந்தனர், பத்மநாபனென்னும் பிராம்மணன் அத்தீர்த்த மஹிமையை அறிந்து ஆச்சரியப்பட்டு பாபநிவர்த்திவுடையவனுய் ப ரிசுத்தனுன தன்புத்திரனே இழைத்துககொண்டு உல்லாசத்துடன் தமது சிரஹத்திர்க்குச்சென்றனன்.

## ஸ்வாமி புஷ்கரணி உற்பத்தி.

பூர்வத்தில் பிரம்மாவின் பத்தினியாகிய ஸரஸ்வதிதேவி ஈசுவரனே ஆசிரயித்து கங்காதேவி ஸமஸ்ததீர்த்தங்களேயும்விட மிக்கபுண்ணிய கரமான நதிரூபமாய்விட்டதைக்கண்டு தான் அக்கங்கையைப்பார்க்கி லுமதிக புண்ணிய பிரதான முடையவளான நதீரூபமடையவேணு மெனக் கருத்துகொண்டு பிர்ம்மாவர்த்தக்ஷேத்திரத்தில் ஸ்ரீமந்நாராய ணமூர்த்தியைக்குரித்து தபஞ்செய்துக் கொண்டிருந்தனள். அச்சம யத்தில் யிரம்மாவின் புத்திரனுன புலஸ்தியபிரம்மா அக்ஷேத்திரத்திர் க்குவந்தனர், அவரைப்பார்த்து ஸரஸ்வதி தேவியானவள் அவர் தன் புத்திரனெஅறெண்ணி யவருக்குப்பிரத்தியுத்தனுயி வந்த னங்கள் செய்யாமலிருந்தனள். அப்பொழுது புலஸ்தியபிரம்மா ஸ்ரஸ்வதி தன்னேயமதித்தனளென்றெண்ணி யதிகசினமடைந்து ஓ ஸரஸ்வதி நீ நம்மையவமதித்தாயாகையாலுனக்கு நதீரூபமா ஸர்வதீர்த்தோத்தம முண்டாகாமற்போகக்கடவதென சாபவாக்கியம் நேரிட்டது அதை க்வெியுற்று ஸரஸ்வதிகோபாக்கிராந்த முடையவளாய் ஓய் நீ எனக்குச் சாபங்கொடுத்தாயாகையா லுனககு ஜன்மித்த புத்ரர்களெல்லோரும் அரக்கர்களாக்கடவரெனமொழிந்தனள். அதைக்கேட்டு புலஸ்திய பிரம்மா யான்தெரியாமல் சொல்லிவிட்டதர்க்கு நீரெனக்கிப்படி சாப மளிக்கத்தக்கதன்று என்னேயனுக்கிரஹிக்க வேண்டுமென பிரார்த் திக்கையில் ஸரஸ்வதிகேட்டு. ஓய் நுனக்குக்கடைசியில் ஜன்மிக்கும்

புத்திரன் மிக்க விஷ்ணுபக்த்தியுடையவனுக கல்பாந்தஸ்த்தாயியாக இலிக்கப்போகிருனென மொழிந்துவிட்டுப்பின்னுந்தபஞ்செய்கையில் அவருக்குநாராயணமூர்த்தி பிரசன்னமாகி உனக்கென்னவேண்டுங் கேளெனமொழிய அந்தஸரஸ்வதி தான் நதிரூபமாக சமஸ்த்ததீர்த்தங் களைப்பார்க்கிலும் சிரேஷ்ட முடையவளாக இருக்க வேண்டுமென பிரார்த்திக்கையில் அந்தபகவான்கேட்டு ஒ ஸரஸ்வதீ உனக்கு பிரம் மாவினுலுண்டான சாபந்தவராது ஆகையால் நீ நதிரூபமாகசர்வோத் தமத்தை அடையத்தக்கவளாகாம் உனக்கு யாம் உபாயஞ் சொல்லு கின்றனம் அதியாதென நீ சேஷாசலத்தில் சரோரூபமடைந்து சமஸ் த்ததீர்த்தங்களிலும் சிரேஷ்டமுடையவளாக இருந்து உன்னிடத்தில் ஸ்நானஞ்செய்தவர்களுக்கு சகல பாபங்களும் நசித்துவிடும்படிக்குச் செய்துகொண்டிருப்பாயானல் இன்னிடத்தில் சமஸ்த்த தீர்த்தங்களும் தனுர்மாமாசத்தில்ஸ்நானஞ்செய்து தம்மிடத்தில் பாபாத்துமாககள் ஸ்நானஞ் செய்துவருகிறதினுலுண்டாகிய பாபத்தை நிவர்த்தியடைய க்கடவர்களென், அனுக்கிரஹித்ததினல் அந்த சரஸ்வதி அப்பர்வதத் திற்குவந்து அவ்விடத்திற்குவந்து அவ்விடத்தில் சுவாமி சன்னிதியில் சரோரூபமாக அவதரித்து சுவாமி புஷ்க்கரணி யெனும்நாமதேயத் தால் பிரஸித்தியடைந்திருக்கின்றனள். அனந்தரம் அத்தடாகத்தின் கிழக்கு மேற்கு தெற்கு வடக்கு திக்குகளிலும், அக்கினிதிக்கிலும், நிருதி ஈசானிய திக்குகளிலும், மார்க்கண்டேய முனியும் எமன் வாயுவு குபேரன் அக்கினியும் வஷிஷ்டரும காலவரும் ஸ்நானஞ் செய்து அவர்கள் மனேபீஷ்டத்தை அடைந்தனர்க ளாகையால் அந்தபிரதேசத்தில் வரிசைக்கிரமமாக மார்க்கண்டேய தீர்த்தம் எமதீர் த்தம் வாயுதீர்த்தம் குபேரதீர்த்தம் அக்கினி தீர்த்தம் வஷிஷ்டதீர்த்தம் காலவதீர்த்தங்களெனவும் மத்தியில் சரஸ்வதி தீர்த்தமெனவும் வாயு திசையில் வராஹமூர்த்தி வீற்றிருப்பதால் வராஹ தீர்த்தமெனவும் ஒன்பது நாமதேயங்களால் பிரஸீத்தி யடைந்திருககின்றன.

## ஸ்வாமி புஷ்கரணி மஹிமை

பூர்வீகத்தில்சந்திர வம்க்த்திலுதித்து சந்தன மஹாராஜன் தன் இராஜ்யத்தைபுத்திரனுகிய தாமகுப்தன் ஆதீனஞ்செய்துபிட்டு தான் தீர்த்தயாத்திரைசெய்து தபோநிஷ்டனுக இருந்துகொண்டிருந்தனன்.

அப்போது அந்ததர்ம்மகுப்தனொருநாள் சேனைகளுடன் வனத்தில் வேட்டையாடப்போய் அந்தபைனியங்களைவிட்டு தனிமையாக ஒரு நெருங்கினவனத்தில் பிரவேசித்து அவ்விடத்தில் சஞ்சரிக்கையில் சூரியன் அஸ்த்தமானமாய்விட்டான், அப்போது அவ்வரசனை ஒரு சிங்கங்கண்டு பக்ஷிக்கவெண்ணி யவனை துரத்துகையில் அரசன்பய ம்டைந்தொரு மரமேறினன். அம்மரத்தின்பேயுல் அதற்க்குமுந்தியே யொருகரடி யேறியிருந்தது, அதைக்கண்டு அவ்வரசன் பயமடைந்து நடுங்குகையில் அக்கரடிகண்டு, ஓய் அரசனே நீ தர்மவான் என்னைப் போலொத்த ஜீவன்களை ரக்ஷிக்கபபட்டவன், ஆகையால்உன்னையான் பக்ஷியாமல் இரக்ஷிக்கிறேன் என்னிடத்திற்குவாவென் றழைக்க, அவ் வரசன் தைரியமடைந்து அதனிடத்திற்குச்சென்றனன், அப்பொழுது அக்கரடி அரசனுடன் ஓய் நீ தூக்க்ங்கொள்ள விரும்புவாயானல் என் துடையின்பேரில் தூங்குமெனமொழிந்தது. அதைக்கேட்டு அவ்வரசன் அதின்துடையின்பேரில் தூங்கிககொண்டிருக்கையில் அ ச்சிங்கம் கரடியுடன் ஓய் இவ்வரசன் நம்மைப்போலொற்ற துஷ்ட மிருகங்களை சிக்ஷிக்க இவ்வரணியத்திற்கு வந்திருக்கின்றனன், அவனை நம்பாமல் கிழேதள்ளிவிடுவாயானல் யானவனை பக்ஷித்துவிட்டு என் இருப்பிடஞ் செல்லுகிறேனெனமொழிய கரடுகேட்டு சிங்கத்துடன் ஓய் லோகத்தில் சகல சாஸ்திரபுராண இதிஹாஸங்களிலும் மித்திர துரோஹத்திற்கு பிராய்ச்சித்தமில்லை யெனவும் அப்பாபம்சே துஸ்நா னம் கங்காஸ்னானங்களிலும் நிவர்த்திக்கப் படாதெனவும் சொல்லப் பட்குருக்கிற தாகையால் என்னை நம்பினவனுக்கு நான் துரோஹஞ் செயயமாட்டேன் போவென சொல்லிவிட்டது. அப்பால்ந்த தர்ம குப்தன் தூக்கம் விழித்துகொள்ளுகையில் அக்கரடி யவன்புத்தியறிய வெண்ணி ஓய் எனக்கும் தூக்கம்வருகின்றது யானும் உன்துடையின் பேரில் படுத்துக்கொள்ளுகையில் அந்தசிங்கம் முன்போல அவ்வரச னுடன் கரடியைகிழேதள்ளிவிடுமென அவன் சிங்கத்தின் வாந்த்தைக் சிசைந்து அக்கரடியை கிழேதள்ளுகையில் அதுதூக்கம்விழித்து ஒரு கிளையைப்பற்றிக்கொண்டு நின்று அவ்வரசனை ப்பார்த்று ஓய் நீ விசு வாசகாதகன் உன்னுடன் சஹவாசஞ் செய்பவர்களுக்கு அத்யந்த பாமமுண்டாகும நீ சைத்தியம் பிடித்தவனாகி பூமியில் சஞ்சரிககக்கட வாயெனசொல்லி அச்சிங்கத்தைப்பார்த்து ஓய் நீ முன்னல் குபேரன்

மந்த்ரியாகிய கந்தருவன் உனக்கு கௌதமர் மிருகரூபமுண்டாகும்படி சாபமளித்து அப்பால் கருணையுண்டாய் ஓய் தியானகாஷ்ட மஹா முனி வனவிஹாரத்தின்பொருட்டு மிருகரூபமடைந்திருக்க உனக்கவருடன் சம்பாஷணையுண்டானால் உன்சர்மம் நிவர்த்தி யாகுமென மொழிந்தன ராகையால் இன்றைச்கென்னுடன் சம்பாஷித்ததினால் உன்சாபம் நிவர்த்தியாய்விட்டதென அச்சிங்கம் மிருகரூபத்தைவிட்டு கெந்தர்வனாக அலகாபுரிக்கேகினன். அவ்வரசன் பைத்தியம்பிடித்து பூலோகத்தில்சஞ்சரிக்கையில் அவனுக்குப்பிதவோன நந்தன்கண்டு அதிக துயரமடைந்து அப்புதல்வனை அழைத்துக்கொண்டு ஜயமுனியினிடத்திற்குச்சென்று அவருககு தெண்டன் சமர்ப்பித்து ஸ்வாமி எனது புதல்வனுக்கு பைத்தியம் எவ்விதம் நிவர்த்தியாகுமென வேண்ட அம்முனிவர் சிலபொழுது தியானித்து ஓய் உன் குமாரனுக்கு விசுவாசகாதகத்தினால் பைத்தியம் பிடித்திருக்கிறதாகையால், சுவர்ன்னமுக்ரீநதிக்கு வடக்கில் வேங்கடாத்திரி யெனுமொரு பர்வதமுண்டு நீ அவ்விடத்திற்கு உன்குமாரனை அழைத்துக்கொண்டுபோய் சகல பாபங்களும் ஹாமாகப்பட்டஸ்வாமி புஷ்கரணியில்ஸ்நானஞ் செய்வித்தாயானால் அவன பாபமொழிந்து பைத்தியம் நீங்கி சுகிக்கக்கடவனெனமொழிய, அந்தநந்தன் தன்புத்திரனை அழைந்துகொண்டுபோய் அப்பர்வதஞ்சேர்ந்து அவனைஸ்வாமீ புஷ்க்கரணியில் ஸ்நாஞ் செய்விக்கையில் அவனுக்குபைத்தியம்விட்டு அனந்தரம் ஸ்ரீநிவாஸமூர்த்திக்கு நமஸ்கரித்து சுகமாக இரர்ஜயபரிபாலனஞ்செய்துக்கொண்டிருந்தனன் மற்றும் இந்தகிரிராஜத்துக்கு அதைதரிசித்றமாத்திரத்தில் அக்ஞியானிகளுக்கு ஞானமுண்டாவதினால் ஞானகிரியேனவும் நாராயணனென்னுமொரு பிராம்மணன் அவ்விள்த்தில் பகவதானுக்ரஹ மடைந்தனராகையினாலே நாய்ாயணாத்திரி யெனவும் அதை கருத்மான் வைகுந்தத்திலிருந்துக்கொண்டு வந்ததினால் கருடாசலமெனவும் நாராயணமூர்த்தி வராஹரூபத்துடன் வஸித்துக் கொண்டிருப்பதினால் வராஹபர்வத மெனவும் அப்பாவதத்தின் பத்தியிலிருக்கும் அஹோபிலத்தில் பகவான் நிருஸிம்ம ரூபமாய் நிவஸிப்பதினால் ஸிம்ஹாத்திரி யெனவும் முன்னால் அப்பர்வதம்வைகுந்தத்திலிருந்த தாகையால் வைகுண்டகிரியெனவும் நிரந்தரம் லக்ஷ்மீநவஸித்துவருவதால் ஸ்ரீசைலமெனவும பகவான் லக்ஷ்மீ ஸமேதராக நிவஸிப்பதினால் ஸ்ரீனிவாச

கிரியெனவும் சகல மஹோத்ஸவங்களுக்கும் ஸ்தானமாகையால் கலியாணகிரி யெனவும் இந்தநாமங்கள் மார்கண்டபுராணம் கருடபுராணம் பிரம்மோத்தரகாண்டம் பிரம்மாண்டபுராணம் ஸ்கந்தபுராணம் வாமன வராஹபவிஷ்யோத்தர புராணங்களில் வியாஸாதிகளால் சொல்லப்பட்டிருக்கின்றன இதுவுமல்லாமல் அவ்விடத்தில் கோகற்பமென்றொரு சிலாமத்தியில் பிலமுண்டு அதில்ஸ்நானஞ்செய்பவர்களுக்கு ஜன்மாந்திரமில்லையென்று பஹுப்பிரசித்த மாயிருக்கின்றது. அதன்விருத்தாந்தத்தை முன்னால் ஏழுதியிருக்கு மொரு புராணத்தில் சொல்லப்பட்டிருக்க இல்லை ஆகையால் அந்தபிரபாவத்தைக் குரித்து ஒழுதுவதருமையாயிருக்கின்றது.

## குமார தீர்த்த மஹிமை.

பூர்வத்தில் வடதேசஸ்தனான ஒரு பிராம்மணன் வார்தீபத்தை அடைந்து அப்பருவத்தில் தரித்திரத்தினால் அதிக சங்கடங்களுடன் தன்குடும்பத்தை பாதுகார்க்கும் திரமையன்றிலோகத்தில் இஹபரங்களிலும் சுகரமானவைத்ன மாகையினாலே அத்தனத்தைச்சம்பாதித்து இஹபர லோகங்களிலும் சுகத்தை அடைவதற்குதனக்கு வார்தீபம் சம்பவித்ததேன வதிகதுயரமடைந்து அவன் சுதேசம்விட்டு தென்திசையில் பிரவாஹித்துக்கொண்டிருக்கிற சுவர்னமுகரீநதி தீரத்துக்கு வந்து அவிடத்திலிருக்கும் சேஷாசலத்திற்குச்சென்று அப்பர்வத முச்சியில் அச்சருவில்வீழ்ந்து பிராணத்தியாகஞ் செய்துகொள்ள வெண்ணி பிரம்மா விஷ்ணு ருத்திரன் குதலானவர்களை தியானித்து, வேங்கடாசலபதிக்கு யமஸ்கரிது யான் இச்சருபில் வீழ்ந்திருக்கிறேன் என முறையிடுகையில் அப்பரந்தாமன் பக்த இரக்ஷகனாகையால் தயா ஸஹிருதய முடையவராய் அரசன்புத்திரனது போலவேஷம்பூண்டு அந்த பிராம்மணனுக்குப் பிரஸன்னமாகி ஓய் பிராம்மணா நீ ஏன் இப்படிக்கொற்ற சாஹசங்கள்செய்தாய் லோகத்தில் பிராம்மணன் இப்படிப்பட்ட சாஹசங்கள் செய்தானே யானால் அவனுக்கு பரலோகத்தில் அதிகதுபரமுண்டாகு மாகையால் உன்தரித்திரத்தை நிவர்த்திக்கயான் உபாயஞ் சொலுகின்றேன் நீ இறங்கிவாவென்றழைக்க அந்த ப்பிராம்மணன் சந்துஷ்ட்டியடைந்து அப்பர்வதத்தின் உச்சிபிரங்கி அந்த மஹானுபாவனிபிம் நின்றனன், அப்போது இராஜவேஷம் பூண்ட நாராயணன் ஓய் பிராம்மணோத்தமா நீஎன்னுடன்கூட வெனது கரத்தைப்பற்றிக்கொண்டு வருவாயானாலுனக்கு சகல சம்பததுகளு முண்டாகுமென்றுசொல்ல, அந்த பிராம்மணன் அவரினது கரம்பற்றிக்கொண்டு அப்பர்வத்திலிருக்கும் பாபவினாச தீர்த்தத்துக்கு வடபுரத்தில்நின்றனர் அப்போது அவ்வரசன் குமாரன் அந்த பிராம்மணனுடன் ஓய் நீ இந்த பாபவினாசத்திற்கு வடபுரமிருக்கின்ற தீர்த்தத்தில்

ஸ்நானஞ்செய்வாயானல் உனக்குவார்தீபங்கழிண்டு கௌமாரத்துவமும் சகலசம்பத்துகளும் உண்டாகுமெலன மொழிந்தனர், அப்போது அவர் அரசன் குமாரனது வார்த்தைகளுக்கு சைந்து அந்த தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்கையில் அந்த பகவான் அந்தரத்தானமாய் விட்டனர்.

அந்த பிராம்மணன் தேஹம் விருத்தாப்பியம்நீங்கி கௌமாரத்துவமடைய அப்பொழுது அவன் மிக்கவதிசயமடைந்து தன்னுடன் வந்த அரசன் ஸ்வாமி என்னறிந்துக்கொண்டு அப்பரந்தாமன் தமக்குக் காணுமற் போனரென சிந்திருத்து நாற்றிசையிலுஞ் சுற்றிப்பார்க்கையில் அவ்வெம்பெருமான் ஆகாயத்தினிடமாக யிருந்துகொண்டு பிராம்மணனுடன் ஓய் உனக்கு விருத்தாப்பியம்நீங்கி கௌமாரத்துவமுண்டான யடியால் இனி நீ தேசத்துக்குச்சென்று சகலசம்பத்துகளுமடைந்து நிஷித்தகாரியங்களைவிட்டு சாஸ்திர சம்மதமான கத்துருமங்களை ச்செய்துக்கொண்டு தாராபுத்திராதிகளை இரக்ஷித்து முடிவில் பரம்பதத்திற்கு வரககடவா எனக்கட்டளையிட அந்த பிராம்மணன் ஆனந்தககடலில் மூழ்கினவனுய்த் தன்வீட்டிற்குச்சென்றனன் இவ்விதமாய் அந்தபிராப்மணன் ஸ்நானஞ்செய்தமாத்திரத்தில் விருத்தாப்பியம்நீங்கி கௌமாரத்துவம் சம்பவித்தபடியால் அது முதல் அந்ததீர்த்தம் இராஜகுமாரதார் தீர்த்தமென பிரசித்தியடைந்திருக்கின்றது.

## பலசுரிதி,

இந்தக்ஷேத்திரத்தில் முன்னல்பரமன் தசரதமஹாராஜன் தொண்டமாது சக்கிறவர்த்தி முதலானவர்களும் மனுஷ்யர்களும் இராக்ஷஸர்களும் ஸ்வாமிபுஷ்க்கரணி முதலான பதினேருதீர்த்தங்களிலும் ஸ்நானஞ்செய்து அவரவர்க்ள் மனேபீஷ்ட்ட த்தை அடைந்தனர் களாதலால் அப்படிப்பட்டபுண்ய தீர்த்தபரிவிருதமாகிய வேங்கடாசலத்திற்கு இப்பொழுது எந்தமனுஷ்யனுவதுவந்து அவ்விடத்திலுள்ள புண்ணியதீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்து கலியுகத்தில் ஸ்ரீநிவாஸரூபதாரனுய் தமனுதர்சனஞ்செய்துக்கொண்டு வருகிறசகலமானவர்களுக்கும் மோக்ஷங்கொடுத்துக்கொண்டுவருகிற பகவானுங்கு பூஜாபிரதக்ஷண நமஸ்காரம்செய்து வருவார்களானல் அவர்களுக்கு இஹத்தில் சகலசம்பத்துகளும் புத்திரபௌத்திர அபிவிருத்தியும் சமஸ்தரோக நிவர்த்தியும் நிரந்தரம் பகவத்பக்த்தியுமுண்டாய் கடைசியில் பரமபத வாசமும் உண்டாகுமென்று இவ்விருத்தாந்தங்கள் மார்க்கண்டேய புராணம் முதலிய வேறுபுரர்ணங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன.

இப்படிப்பட்ட புண்ணியக்ஷேத்திரமும்பரமன் எம்பெருமானுடன் சுவாமீ யான் தமக்குமஹோத்ஸவம் செய்யநினைத்து இருக்கிறேனுகையால் அதற்கு ஆக்ஞையைத்தரவேணுமென மலவாராவேண்டுகையில் ஸ்ரீநிவாசமூர்த்தி அவ்விதமே நடந்துமென வாக்யாபித்தனர், அப்பிதாமஹன்ஸௌரமான யிரகாரமாய்ச்சம்பவிக்கும் புரட்டாசிமாசம் சுக்லபக்ஷசித்தாநக்ஷத்திரத்துடன் கூடின சுபதினத்தில் த்வஜாரோஹணம் செய்து அது முதல் ஒன்பதுநாள் வரையில் மகோத்ஸவம் செய்து அந்த உத்ஸவத்தைப் பார்க்கவரும் பிராம்மண முதலானவர்களுக்கு பக்ஷியபோஜ்யஸோஷ்ய லேஹயங்களென்னப்பட்ட நான்குவித அன்ன தானங்கள் செய்து சிரவணநக்ஷத்திரத்துடன் சேர்ந்ததினத்தில் தீர்த்தோத்ஸவம் செய்தனராகையால் இப்பொழுதும் அவ்விதமாகவே பிரதிவருஷத்திலும் அந்தமாசத்தில் இரதோத்சவத்துடன் பிரம்மோத்ஸவமும் மற்றும் பஞ்சபர்வாதி விசேஷோத்சவங்களும் செய்து வருகின்றனர்.

---

ஸ்ரீ திருமலை திருப்பதி ஸ்தலங்களில் ஆஜிர்த
உத்ஸவங்களுக்கு செலுத்தவேண்டிய கட்டணவிவரம்.

---

| நெ. | விவரம். | | கட்டவேண்டிய ரூ |
|---|---|---|---|
| 1 | பூலங்கி தரிசனம் ... | ... | 1 |
| 2 | பூலங்கி சேவை ... | ... | 60 |
| 3 | புலிகாபு தரிசனம் ... | ... | 1 |
| 4 | புலிகாபு சேவை ... | ... | 450 |
| 5 | கர்பூர கிண்ணி ... | ... | 250 |
| 6 | புனுகுசட்டம் கிண்ணி ... | ... | 85 |
| 7 | கஸ்தூரி கிண்ணி ... | ... | 50 |
| 8 | ஜபராகிண்ணி ... | ... | 65 |
| 9 | ஸஹஸ்ர கலசாபிஷேகம்... | ... | 1005 |
| 10 | பூரு திருப்பாவாடை ... | ... | 1105 |
| 11 | பாதி திருப்பாவாடை ... | ... | 555 |
| 12 | கோவிலாழ்வார் திருமஞ்சனம் | ... | 505 |
| 13 | ஆமந்திரணோத்ஸவம் ... | ... | 100 |
| 14 | அயினுமஹல் சேவை ... | ... | 61 |
| 15 | தோமாலை சேவை ... | ... | 13 |

| | | | | |
|---|---|---|---|---|
| 26 | ஏகாந்த சேவை | ... | ... | 13 |
| 17 | துலசி அர்ச்சனை | ... | ... | 7 |
| 18 | ஆவத்தர்ஜா பிரம்மோத்ஸவம் | | ... | 1205 |
| 19 | இரண்டாவது தர்ஜா | ஷை | ... | 925 |
| 20 | மூன்ருவது தர்ஜா | ஷை | ... | 850 |
| 21 | நான்ருவது தர்ஜா | ஷை | ... | 705 |
| 22 | ஐந்தாவது தர்ஜா | ஷை | ... | 625 |
| 23 | வசந்தோற்சவம் | ஷை | ... | 1105 |
| 42 | கல்யாண உத்ஸவம் | ஷை | .. | 305 |
| 25 | வஜ்ஜிர கவசம் சஹசர்வ பூபால வாஹனம் | | ... | 61 |
| 26 | ஷை கல்பவிருக்ஷ வாஹனம் | | ... | 61 |
| 27 | வஜ்ஜிர கவசமில்லாமல் சர்வபூபாலவாஹனம் மாத்திரம் | | | 41 |
| 28 | ஷை கல்பவிருக்ஷ வாஹனம் | | ... | 41 |
| 29 | பெரிய சேஷவாஹனம் | ... | ... | 41 |
| 30 | சூரிய பிரபை | ... | ... | 41 |
| 31 | பாலகி வாஹனம் | ... | ... | 41 |
| 32 | புஷ்பரதம் | ... | ... | 41 |
| 33 | முத்து பந்தல் | ... | ... | 41 |
| 34 | கருடவாஹனம் | ... | ... | 21 |
| 35 | ஹனுமந்த வாஹனம் | ... | ... | 21 |
| 36 | சின்ன சேஷவாஹனம் | ... | ... | 21 |
| 37 | சந்திர பிரபை | ... | ... | 21 |
| 38 | ஆனை வாஹனம் | ... | ... | 21 |
| 39 | குதிரைவாஹனம் | ... | ... | 21 |
| 40 | சிங்கவாஹனம் | ... | ... | 21 |
| 41 | ஹம்ஸ வாஹனம் | ... | ... | 21 |
| 42 | வெள்ளி திருச்சி | ... | ... | 21 |
| 43 | ஹாரதி | ... | ... | 1 |

---

பிரஸாதங்கள் திருபணியாரங்கள் கட்டணவிவரம்.

---

| | | | | |
|---|---|---|---|---|
| 1 | பொங்கல் தளிகை | ... | ... | 40 |
| 2 | சக்கரை பொங்கல் தளிகை | | ... | 45 |

| | | | |
|---|---|---|---|
| 3 | புளியோரை தளிகை | ... ... | 35 |
| 4 | ததியோதனம் ஷை | ... ... | 30 |
| 5 | ஷீரா ஷை | ... ... | 85 |
| 6 | கேஸரிபாத் ஷை | ... ... | 65 |
| 7 | சாகரபாத் ஷை | ... ... | 65 |
| 8 | பாயசம் ஷை | ... ... | 45 |
| 9 | சக்கரை லட்டுபொடி | ... ... | 65 |
| 10 | ஜிலோயிபொடி | ... ... | 80 |
| 11 | வடை, மனோஹரம், அப்பம், போளி, தேகுழல், சுகியன் வொவ்வொன்றுக்கு | ... | 60 |
| 12 | தோசை, ஊருகாய், பச்சடியுடன் | ... | 5 |

---

திருமலையில் சுவாமியின் பிரம்மோத்ஸவம் 10 நாள் நடக்கும் அதின் விவரம்.

---

முதல்நாள்:—அங்குரார்பணம் ஸ்ரீசேனாதிபதி உத்ஸவம்.

இரண்டாம்நாள்:— துவஜாரோஹணம், சுவாமிக்கு வஜ்ஜிரகவசத்துடன் போன் திருச்சியில் சாயங்காலம் வுத்சவம். இராத்திரி பெரிய சேஷவாஹனம்.

மூன்றாநாள்:—பகல் சேஷவாஹனம் இரவு ஹம்சவாஹனம்.

நாலாவதுநாள்:—பகல் சிம்ஹவாகனம் இரவு முத்துபல்லக்கு.

ஐந்தாவதுநாள்:—பகல் கல்பவிருக்ஷம் இரவு சர்வபூபால வாகனம்.

ஆறாவதுநாள்:— பகல் மோஹினி அவதாரம் பல்லக்குற்சவம் இரவு பெரிய கருடவாகனம் ஸ்ரீலக்ஷ்மீஹாரம் மகரகண்டி வகைரா விசேஷ திருவாபரணங்களுடன் சுவாமி அலங்காரம்.

ஏழாவதுநாள்:—பகல் அநுமந்தவாகனம் சாயங்காலம் வசந்தோற்சவம் யானைவாகனம்.

எட்டாவதுநாள்:—பகல் சூரியபிரபை இரவு சந்திரபிரபை.

ஒன்பதாவது நாள்:—பகல் திருத்தேர் இரவு குதிரைவாகனம்.

பத்தாவதுநாள்:—(1) பகல் லக்குற்சவம் (2) பூர்ணாபிஷேகமென்னும் திருச்சி உசற்வம் இந்த இரண்டு உற்சவக்களுகு அதிகாலையில் நடக்கும் பிரதிதீர்த்றவாரி ராத்திரி துவஜாரோகண உற்சவம். பொன் திருச்சியில் பெருமாளுடைய நாச்சியாருடன் வஜ்ஜீரகலசம் வகைரு திருவாபரணத்துடன் உற்சவம்.

---

## திருமலையில் பிரதி தினம் சுவாமியின் சேவை விவரம்.

---

காலையில் 6 மணி முதல் 7 மணிக்குள் விஸ்வரூப தரிசனம் எய்லாருக்கும் தர்மசேவை.

9 மணிக்கு தோமாலைசேவை இதற்காக ரூ. 13—0—0 செலுத்தி டிக்கட்டு வொன்றுக்கு 2 பேர் சுவாமி சேவைக்கு போகலாம்.

10 மணிக்கு சுவாமியின் கொலுவு பொன் வாசற்படிக்கு முன்பாக வெள்ளிநாற்காலியில் யெழுந்தருளசெய்து பஞ்சாங்கம் படிப்பது, வெகுவிநோதமானசேவை எல்தாரும் பார்க்கலாம். பிறகு சுவாமிக்கு துலசி அர்ச்சனை, அர்ச்சனை 1-க்கு ரூ. 7—0—0 செலுத்தி ரசீதுபெற்றுக்கொண்டால் 4 பேர் சேவைக்கு விடுவாகள்.

11 மணிக்கு சுவாமிக்கு ஆராதனை பிறகு தர்மசேவை.

இரவு 7 மணிக்கு சுவாமிக்கு ஆராதனை பிறகு தர்மசேவை.

ஏகாந்தசேவை மேல்சொல்விய தர்மசேவையானவுடன் ஏகாந்தசேவை இதற்க்கும் டிக்கெட்டு வாங்கவேண்டும், ஒவ்வொரு டிக்கெட்டுக்கு 5 பேர் சேவைக்கு போகலாம்.

பிரதி வியாழக்கிழமை தினம் இரவு தர்மசேவை கிடையாது. அன்றையதினம் இரவு யூலங்கி சேவைக்காக டிக்கட்டு 1rகு ரூ. 1 வீதம் செலுத்தி டிக்கட்டு பெற்றுகொண்டால் சேவைக்கு விடுலார்கள் மருநாள் வெள்ளிகிழமை காலேயில் அதேமாதிரி பூலக்கியுடன் விஸ்வரூபசேவை இதற்கு டிகட் 1 க்கு ரூ. 1 விதம் செலுத்தி வாங்கினவர்களேதான் சேவைக்கு விடுவரார்கள். வெள்ளிகிழவைபகல் திருமஞ்சனம். யிதற்கும் டிகட்டு 1 க்கு ரூ. 1 விதம் செலுத்தி டிகட்டு வாங்கினவர்கள்த்தான் ஷை சேவைககு போகலாம். யின்னும் மற்ற விவரங்களுக்கு நேரில் தேரிந்துகொள்ளலாம்.

---

திருப்பதி ஸ்ரீகோவிந்தராஜசுவாமி சன்னிதியிலும் முன்சொன்னபடியே சேவை கிடைக்கும்.

---

யாத்திராதிகள் தங்குமிடம்.

திருப்பதியில் வாடகையில்லாமல் கிடைக்குமிடம்,

1 தேவஸ்தானம் பூந்தோட்ட சத்திரம்

2 அத்திராம்ஜீ மடம் தர்மசாலே

3 மைசூர் மஹாராஜா சத்திரம்

4 நரா அவர்கள் சத்திரம்

5 பங்களூரார் சத்திரம்

6 ரெயில்ஸ்டேஷனருகில் ராமசாமிநாயுடு சத்திரம்

7 ரெயில்ஸ்டேஷனருகில் தேவஸ்தானம் புது சத்திரம்

இவைதவிர புது தெருவில் சென்னே தேவகி வெங்கடகிருஷ்ணம செட்டி கங்கிபாடி சம்பத்து செட்டியார் இவர்கள்கட்டிய சத்திரத்தில் வைசியர்களுக்கும் இடம் கிடைக்கும்,

திருமலேயில் தேவஸ்தானம் 1000-கால் பண்டபத்திற் திவாணம் என்னும்மிடத்திலும் பிட்டாபுரம் ராஜா அவர்கள் சத்திரத்திலும் அத்திராம்ஜீ வடத்திலும் (பாவாஜீ அவர்கள் சத்திரம்) மைசூர் மஹாராஜாமர்கள் யத்திரத்திலும் சௌகரியமாக இடம்கிடைக்கும், சௌராஷ்டியர்களுக்கு திருமலேயில் மேலண்ட மாடவீதியிலும் திருப்பதியில் ஸ்ரீராமசுவாமி சன்னதிதெருவிலும் இடம் கிடைக்கும்,

அலமேல்மங்கை புரமென்னும் திருச்சானூரில் ஸ்ரீபத்மாவதி அம்மனுடைய தேவஸதானத்தின் சேவை விபரம்.

| | | ரூ | அ |
|---|---|---|---|
| 1 | ஸஹஸ்ராம அர்ச்சனே | 5 | 0 |
| 2 | கருடவாஹனம் | 21 | 0 |
| 3 | ஆனேவாஹனம் | 21 | 0 |
| 4 | வெள்ளி திருச்சி | 5 | 0 |
| 5 | ஹாரதி | 0 | 4 |
| 6 | அஷ்டோத்திர அர்சனே | 0 | 8 |

பிரதி வருஷம் கார்த்திகைமாதத்தில் பிரம்மோத்ஸவம் 10 நாள் வெகுவிமரசையாக நடக்கும் பத்தாவது நாள் தீர்த்வாரி பஞ்சமி திர்த்தமென்று மிகவும் விசேஷமானது, மேற்படி பஞ்சமி தீர்த்தத்துக்காக வெகுதூரத்திலிருந்து ஜனங்கள் விசேஷமாக வருகிறார்கள், பங்குனி மாதத்தில் தெப்போற்சவம் வெகு அழகான தெப்பத்தில் ஒரு வாரம் நடக்கும் அதில் முதல் நாள் ஸ்ரீகண்ணனுக்கும் இரண்டாவது நாள் ஸ்ரீசுந்திர ராஜசுவாமிக்கும் 3,4,5, நாளில் ஸ்ரீபத்மாவதியம்மனுக்கும் 6ம் நாள் திருப்பதி ஸ்ரீ கோவிந்தராஜருக்கும், 7-ம் நாள் திருப்பதி ஸ்ரீ ராமருக்கும் வெகு வைபவத்துடன் நடக்கும், இந்தமாதிரி தெப்பல் பட்டம் வேரெங்கும் கிடையாது, அவசியம் பார்க்கத்தகுந்தது.



## புஸ்த்தக விளம்பரம்.



| | | | | |
|---|---|---|---|---|
| 1 வேங்கடேஸ்வர சாக்ஷி | .... | 0 | 0 | 6 |
| 2 கருடப்பத்து | .... | 0 | 0 | 6 |
| 3 வேங்கடேஸ்வர சுப்ரபாதம் | .... | 0 | 1 | 6 |
| 4 வேங்கடேஸ்வர பஜனகீர்த்தன முதல்பாகம் | .... | 0 | 1 | 0 |
| ,, இரண்டாம்பாகம் | .... | 0 | 1 | 0 |
| ,, மூன்றாம்பாகம் | .... | 0 | 1 | 0 |
| ,, இநாலாம்பாகம் | .... | 0 | 1 | 0 |
| 5 வேங்கடேஸ்வர சதகம் | .... | 0 | 3 | 0 |
| 6 வேங்கடேஸ்வர பிரார்த்தன | .... | 0 | 1 | 0 |

பி. ரங்கநாயகுலு நாயுடு,

புஸ்தக வியாபாரம், திருப்பதி,